# சிங்கார் அழகு, வெறும் சிமிழ் அழகு அல்ல ...






## மங்கள திலகமாம்

## குங்குமப் பொட்டழகு

குங்குமத்தின் உண்மையான மதிப்பு அதன் உள்ளமைப்பு. சீரிய விஞ்ஞான முறையில் தயாரிக்கப் பட்டது சிங்கார். உங்கள் சருமத்தின் pH இயல்புக்கு சிங்கார் குங்குமப்பொட்டின் pH இயல்பு பொருந்துமாறு பார்த்துக்கொள்கிறோம். pH என்பது என்ன? அமில, காரத் தன்மைகளை வரையறுக்கும் அளவுகோல் அது; 0 முதல் 14 வரை வேறுபட்டிருக்கும். சருமத்திற்கு உள்ள pH ஏறத்தாழ 5.0. சிங்கார் கும்குமுக்கும் 5.0 இதன் அர்த்தம், உங்கள் முகத்துக்கு முழுப் பொருத்தம்—எனவே, எரிச்சலூட்டாது.

- அனுமதி பெற்ற வர்ணங்களின் வண்டல்படியாத் தைலக் குழம்பாகிய சிங்கார் கும்கும், கலையாப் பண்புடனே களை பொலிந்திடும்.
- உன்னதமான தரமுள்ள தயாரிப்பு—இதனைப் படைப்போர்: இந்தியாவிலேயே, பொதிவிட்ட குங்குமப் பொட்டுத் துறையில் முன்னோடிகள்.
- சிங்கார் டீலக்ஸ் கும்கும், வைபோகமான கும்குமம்—பளிச்சிடாப் பணிவுள்ள எழில்ரக மாக வருகுது. ஒளிமின்னும் சாதாரண கும்கும் ரகமும் கிடைக்கும்.




கருத்துடனே தெரிந்தெடுப்பீர்

## சிங்கார்

பாரத நாட்டின்
உச்ச விற்பனையுடைய
பரிபூரண நம்பிக்கைக்குரிய
கும்கும திலகம்

everest/282/SH/tm



# கல்கி

ராக்ஷஸ
மார்கழி 20

○

ஜனவரி 4
1976

○

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே: சம்பவங்களும் கற்பனையே.



















★ மேலேயுள்ள ஆறு மீன்களில் ஒன்று மட்டும் மாறுபட்டிருக்கிறது. அது எது தெரியுமா?

([illegible])

★ காட்டினுள் புகுந்த இந்தக் குழந்தைகளுக்கு வெளியே வரும் வழி தெரியவில்லையாம். தவிக்கின்றனர். கொஞ்சம் வழிகாட்டி உதவுங்களேன்!



---


என்னிடம் வந்த பிறகு அசல் முத்து தான்!
மதுரை முத்து


உம்.. கோதா எங்கே?


உம், நானும் அதைத்தான் கேட்கிறேன்

# அரசியல் அமைப்பு

அண்மையில் ஒரு பாராட்டுக் கூட்டத்துக்கு முதல்வர் தலைமை வகித்துப் பேசியபோது, ''வெள்ளி விழாவும் பொன் விழாவும் தான் கொண்டாடுவார்கள். இருபதாண்டுப் பணியைப் பாராட்ட என்ன அவசரம் என்று யோசித்தேன். ஒரு முதலமைச்சரை அழைத்து விழா நடத்தத் தீர்மானித்திருக்கிறார்கள். அடுத்த ஆண்டு முதலமைச்சர் என்ற பதவியே நாட்டில் இருக்குமா என்ற ஐயப்பாடு எழுந்துள்ளதால் இந்த ஆண்டே இருபதாண்டுச் சேவையையே பாராட்டி விடலாம் என்று தீர்மானித்து விட்டார்கள் போலும்!'' என்றார்.

முதல்வரின் இந்தச் சொற்கள், தேசத்தின் அரசியல் அமைப்பில் பெரிய மாறுதல்களை அவர் எதிர்பார்க்கிறார் என்பதை அறிவிக்கின்றன. இதற்கு வலுவளிப்பது போலவே புதுதில்லி பத்திரிகையான 'மெய்ன் ஸ்ட்ரீம்' காங்கிரஸ் முக்கியஸ்தர்கள் பலரது ஆசிகளைப் பெற்றுள்ளதாகக் கருதப்படும் ஓர் அரசியல் அமைப்புத் திட்டத்தைப் பிரசுரித்திருக்கிறது.

மேற்படி திட்டப்படி நாட்டின் அரசியல் அமைப்பு மெய்யாலுமே மாறுமானால் நிகர விளைவுகள் பின்வருமாறு இருக்கும்: நமது பிரதம மந்திரி ஜனாதிபதியாக மாறிவிடுவார். அமெரிக்க ஜனாதிபதி போல் இங்கும் ஜனாதிபதிக்கே சகல அதிகாரங்களும் இருக்கும். அத்துடன் இந்திய அமைச்சரவையின் ஒட்டுமொத்தமான அதிகாரங்களும் ஜனாதிபதியிடமே போய்ச் சேரும். நாடாளுமன்றங்களின் அதிகாரங்கள் கணிசமாகக் குறையும். அடிப்படை உரிமைகளைக் காக்கும் அதிகாரங்கள் நீதிமன்றங்களுக்கு இராது. எனவே அடிப்படை உரிமைகளுக்கு மதிப்பிராது. நீதிமன்றங்களின் சுதந்திரங்கள் மறைந்து போகும். நீதிமன்றங்களுக்கு 'வழிகாட்ட' 'நீதித்துறை மேல் சபை' ஒன்று உருவாகும். பல மாநில அரசுகள் சேர்ந்த சமஷ்டி அமைப்பு நீடிப்பது கடினமான காரியமாகிவிடும்.

கல்கி

மலர் 35

இதழ் 23



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

இதுபோன்ற நிகர விளைவுகளை ஏற்படுத்தக்கூடிய அரசியல் அமைப்பை நாட்டுக்கு நன்மை பயக்கக்கூடியதாக அப்படியே ஏற்பதற்கில்லை. இத்தகைய புரட்சிகரமான மாறுதல்களைச் செய்யப் பிரதமர் முன்யோசனை இன்றி இணங்கிவிடுவார் என்றும் நமக்குத் தோன்றவில்லை. அரசியல் சாஸனத்தில் ஏதும் மாறுதல்கள் செய்வதானால் அல்லது புதிதாகவே ஒன்றை உருவாக்குவதானால் மனம் விட்டுத் தேசத் தலைவர்கள் அனைவரும் விவாதிக்க வேண்டியது அவசியம். ஆளும் கட்சியிலேயே கட்சிக் கட்டுப்பாடுகளைத் தளர்த்தி உள்ளம் திறந்து பேச அனுமதிக்க வேண்டும். எதிர்க் கட்சித் தலைவர்களின் கருத்துக்களையும் கேட்டறிய வேண்டும். அத்துடன் நாட்டிலுள்ள நல்லறிஞர்களின் யோசனைகளைக் கோரிப் பெற வேண்டும்.

பாரத நாட்டின் பாமர மக்கள் என்றைக்குமே கொள்கைகளைக் கணிப்பதைவிடத் தலைவர்களிடம் நம்பிக்கை வைக்கப் பழகியவர்கள். என்றுமுள்ள நிலை இன்றும் நீடிக்கிறது என்பதை குஜராத் நகரசபைத் தேர்தல் முடிவுகளுக்கு நேர்மாறான குஜராத் பஞ்சாயத்துத் தேர்தல் முடிவுகளும், தமிழக ஸ்தாபன காங்கிரஸின் கணிசமான பெரும் பகுதியினர் ஆளும் காங்கிரஸுடன் இணைந்ததும் நிரூபிக்கின்றன.

ஆக இத்தேசத்தின் கோடிக்கணக்கான மக்களுக்கு இன்று ஸ்ரீமதி இந்திரா நம்பிக்கை தரும் தாரகையாக விளங்குகிறார். இதுவே அவரது மெய்யான பலம்; அவரைச் சுற்றிச் சூழ்ந்துள்ள ஒருசில பிரமுகர்கள் மட்டும் அல்ல.

இத்தகைய சக்தி பெற்றுள்ள பிரதமர் தமக்குள்ள அதிகாரங்களை அன்புடனும் அறிவாற்றலுடனும் ஜனநாயகப் பண்புடனும் தீர்க்க தரிசனத்துடனும் நீதி வழுவாமலும் நியாய உணர்வோடும் பிரயோகிப்பார் என எதிர்பார்க்கிறோம்.

தமிழகத்தைப் பொறுத்தமட்டில் மாறி வருகிற அரசியல் சூழலை உணர்ந்திருக்கிற முதல் அமைச்சர் அதற்கேற்ற சாணக்கியத்துடன் தி.மு. க.வின் கொள்கைகளை அனைத்திந்திய நோக்கில் மாற்றியமைப்பது நல்லது.

# இசைக்கு இணையான இனிய பேச்சு

"இந்தேசத்தில் நாளைக்கே ஒரு சங்கீத வித்வான் அரசியல்வாதியாகி விடலாம். ஆனால் ஓர் அரசியல்வாதி திடீரென்று நினைத்துக்கொண்டு சங்கீத வித்வான் ஆகிவிட முடியுமா?'' — காலையில் ஒரு பாராட்டு விழாவில் கூறப்பட்ட முதல்வரின் இந்த வார்த்தைகள் மாலையில் சங்கீத வித்வத் சபையில் பொய்த்துப் போயின! முதல்வரின் சங்கீத வித்வத் சபைச் சொற்பொழிவு இனியதோர் இசை நிகழ்ச்சிக்கு இணையானதாகவே இருந்தது. ஆரம்பத்தில் இடையூறு செய்த சாரீரம்கூட சில நிமிஷங்களில் சரியாகி ஒத்துழைத்தது!

''சட்டப் பேரவையில் ஆண்டறிக்கை வரவு செலவுகளைச் சமர்ப்பிக்கும் போது மட்டுமே நான் பிரசங்கத்தை எழுதிப் படிப்பது வழக்கம். ஆனால் இங்கே எழுதிப் படிக்கிறேன் என்றால் இதற்கு அவ்வளவு முக்கியத்துவம் தருகிறேன் என்று பொருள். ஒவ்வொரு வார்த்தையையும் இங்கே அளந்துதான் பேச வேண்டும்'' என்ற பூர்வபீடிகையுடன் ஆரம்பித்தார் முதல்வர்.

அளந்து பேசிய வார்த்தைகள் அளப்பரிய அழகுடன் பொங்கிப் பிரவகித்து வந்தன. குற்றால அருவியின் கம்பீரத்துடன் அதிலே வான வில்லின் வர்ண ஜாலங்கள் விளையாடுவதையும் பார்த்தோம்.

'சங்கீத வித்வத் சபையில் நிகழ்த்தப்பட்டுள்ள சொற்பொழிவுகளையெல்லாம் தொகுத்து நூலாக வெளியிட வேண்டும்' என்று முதல்வர் யோசனை கூறியுள்ளார். அந்த நூலில் முதல் கட்டுரையாக முதல்வரின் கட்டுரையை வெளியிடுங்கள் என்று நாம் வித்வத் சபை நிர்வாகிகளுக்கு யோசனை சொல்கிறோம்!

# இசை வளர்ச்சிக்கு இசைவான கருத்துக்கள்

முதல்வரின் சொல்லாற்றல் அனைவரும் அறிந்த ஒன்றுதான் என்பதால் அடிக்கோடிட்டுக் காட்டுவது போல் அவர் உதிர்த்த சில கருத்துக்களை மட்டும் தருகிறோம். முதல்வர் கூறுகிறார்:

''கர்நாடக இசை என்பதைத் தமிழ் மொழிக்கு அப்பாற்பட்ட ஒன்றாகச் சிலர் கருதுகிறார்கள். தியாகராஜர், தீட்சிதர், சியாமா சாஸ்திரிகள் காலத்தில் தமிழல்லாத மொழிகளில் இசைப் பாடல்கள் இலக்கணக் கட்டுக்கோப்புடன் இயற்றப்பட்டன என்பதற்காக அந்த மும்மணிகளையும் தமிழ்ப் பாடல்களுக்கு மாறான எண்ணம் கொண்டவர்கள் எனக் கருதிடத் தேவையில்லை. தமிழ் மொழியின் ஆக்கம் குறைந்திருந்த இடைக்காலத்தின் குற்றமே தவிர அவர்கள் யாரும் அதற்குப் பொறுப்பல்லர். தமிழ் மொழி ஆக்கம் பெற்று வளரும் இக்காலத்தில் கர்நாடக இசைப் புலவர்கள் வகுத்துள்ள வழியினின்றும் வழுவாமல், புதுமைகளைப் படைத்திடும் முனைப்பு மேலோங்கிட வேண்டும். புதுமை என்ற பெயரால் நமது அடித்தளத்தை இடித்து நொறுக்கி விடக் கூடாது.''

இவ்வாறு கூறியவர், 'மணமுள்ள மல்லிகை இருக்க, கனகாம்பரத்தை, அதிலும் காகிதக் கனகாம்பரத்தைச் சூடலாமோ என்று கேட்டார். வடக்கே இருந்தும் மேனாட்டிலிருந்தும் வரும் மெல்லிசை நமது நல்லிசையைத் தாக்குவதை எண்ணி வருந்தினார்.

கல்விக் கூடங்களில் தொடக்க வகுப்பிலிருந்து கல்லூரிக் கல்வி வரையில் இசைப் பயிற்சியை எல்லா மாணவர்களுக்கும் கட்டாயப் பாடமாகவே ஆக்கலாம் என்ற ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் கருத்தைச் சிறந்தது என ஏற்று வரவேற்ற முதல்வர், குருகுல வாசத்துக்கு முக்கியத்துவம் தரவேண்டியதையும் வற்புறுத்தினார். ஸ்ரீமதி பாலசரஸ்வதியின் நடனக் கலையை சத்யஜித்ரேயைக் கொண்டு திரைப்படமாக்கி நிலையான பொக்கிஷமாகப் பாதுகாக்க அரசு ஒன்றே கால் லட்சம் ஒதுக்கியுள்ளதை முதல்வர் அறிவித்தார்.

முதல்வரின் மேற்கூறிய கருத்துக்களுடன் இந்திய நுண்கலைக் கழக விழாவைத் தொடங்கி வைத்த துணைவேந்தர் திரு மால்கம் ஆதிசேஷய்யா அவர்களின் அறிவிப்பையும் இணைத்துப் பார்த்தால் கர்நாடக சங்கீதத்துக்கு இனி யோக காலம்தான்! 'அடுத்த கல்வி ஆண்டிலிருந்து சென்னைப் பல்கலைக் கழகத்தின் இந்திய இசைப் பிரிவில் முழு நேரப் பேராசிரியரும் மற்ற ஆசிரியர்களும் இருப்பார்கள். வாத்திய இசை வல்லுனர்களும் இடம் பெறுவார்கள். இப்படி அந்த இலாகாவைப் பலப்படுத்தக் காரணம் இந்திய இசையில் எம். ஏ. பட்டம் பெற வசதி அளிக்கவே. ஆராய்ச்சி செய்து இந்திய இசையில் டாக்டர் பட்டம் பெறவும் வழி பிறக்கும்' என்றெல்லாம் ஆதிசேஷய்யா அவர்கள் அறிவித்துள்ளதைக் கேட்டு இசை உலகு பெருமிதம் அடைந்துள்ளது.

---



### புதிய ஷெரீப்

சென்னையின் புதிய ஷெரீப் திரு ராமகிருஷ்ணனுக்கு வயது இருபத்தொன்பது தான். இவரைவிட இளைஞராக ஒரு ஷெரீப் சென்னையில் இருந்ததில்லை. எம்.ஏ. பரீட்சையில் பல்கலைக் கழகத்திலேயே முதலாவதாகத் தேறியவர். இந்தியன் எக்ஸ்பிரஸ் நிறுவனத்தில் நிர்வாகியாகப் பணியாற்றுகிறார். ஷெரீப் பதவி என்பது அலங்காரப் பதவி மட்டுமல்ல. அதற்கென்று சில அதிகாரங்களும் வழங்கப்படுதல் வேண்டும். அப்போதுதான் ஷெரீபாக வருகிறவர்கள் பயனுள்ள பணியாற்ற முடியும் என்று முதல்வர் கருதி இதுபற்றி மேலும் ஆராயுமாறு திரு ராமகிருஷ்ணனைப் பணித்திருக்கிறார். பதவிக் காலத்தின் ஆரம்பமே பிரமாதமாயிருக்கிறது!

# என்ன சேதி ?

## அன்பு காட்டி அன்பைப் பெறுங்க...!

'தந்தை பெரியார் சிலைத்திறப்பு விழாவில் பேசிய முதலமைச்சரின் செவிகளில் சற்றுத் தொலைவில் நடைபெற்ற ஐயப்ப பஜனைக் கீதங்கள் விழுந்திருக்கின்றன. உடனே அவருக்குக் கோபம் வந்துவிட்டது! 'முதலமைச்சர் என்ற மரியாதை கூட இல்லாமல் இப்படி நடந்து கொள்பவர்களை என்னதான் செய்யக் கூடாது?' என்ற ரீதியில் பேச ஆரம்பித்து விட்டார்.

முதல்வருக்குச் சொல்லிக் கொள்கிறோம்: அன்பைக் கொடுத்துத்தான் அன்பைப் பெற வேண்டும். மரியாதை காட்டித்தான் மரியாதை பெற வேண்டும்.

தியாகராயநகர் சிவா — விஷ்ணு ஆலயத் தருகே பெரியார் சிலை அமைத்ததே பண்பற்ற செயல். அதைவிட அநாகரிகச் செயல், அதிலே 'கடவுளை நம்புகிறவன் முட்டாள்' என்பது போன்ற வரிகளை எழுதியிருப்பது.

நாஸ்திகப் பிரசாரம் செய்யக் கழகத்துக்கு உள்ள உரிமையை மதிக்கிறோம். ஆனால் அதைத் தக்க இடத்தில் தக்க விதத்தில் செய்யுங்கள் என்கிறோம். நீங்கள் செய்த காரியம் பெரியாருக்கே பிடிக்காது. ஏனெனில் அவர் நாத்திகரானாலும் தனிப்பட்ட முறையில் ஆத்திகரை மதித்தவர்.

இப்படிப்பட்ட பண்பற்ற காரியங்களுக்கு உடந்தையாக இருந்துவிட்டு ஐயப்ப பஜனைக் கோஷ்டியிடம் மட்டும் முதல்வர் பண்பை எதிர்பார்த்தது என்ன நியாயமோ, தெரியவில்லை.

அநியாயமான அந்தக் கோரிக்கையையும் ஐயப்ப பக்தர்கள் ஏற்றார்கள். முதல்வருக்குத் தங்கள் பஜனை இடையூறாக இருப்பதாக அறிய வந்ததும் ஒலிபெருக்கியை நிறுத்தி விட்டார்கள்!

## சிறுபிள்ளைத்தனம்!

பம்பாய் வழக்கறிஞர்கள் பலர் சேர்ந்து மக்கள் உரிமைகள் பற்றி விவாதிக்கத் தீர்மானித்தார்கள். இந்த வழக்கறிஞர் கூட்டத்துக்குக் காவல்துறை தடை விதித்தது! இதனைக் 'கொடுமை' என்றும் 'சிறுபிள்ளைத்தனம்' என்றும் உயர்நீதி மன்றம் கண்டனம் செய்து தடை உத்தரவை அகற்றித் தீர்ப்பளித்தது.

நெருக்கடி நிலைப் பிரகடனத்தை யொட்டி அதிகாரிகளுக்கு உள்ள அபரிமிதமான அதிகாரங்கள் துஷ்பிரயோகமாகலாம் என்பதற்கு மேற்படி நிகழ்ச்சி மற்றுமொரு சான்றாகிறது. இதனால்தான் நெருக்கடி நிலைப் பிரகடனம் தேவைக்கு அதிகமாக ஒருநாள் கூட நீடிக்க வேண்டாம் என்பது ஆள்வோரின் கருத்தாகவும் இருக்கிறது.

## சிவராவ்

அணு ஆயுதங்கள் ஒழிப்புபற்றி கென்னடியுடன் பேச அமெரிக்காவுக்கு ராஜாஜி சென்றபோது அவருக்கு உறுதுணையாகச் சென்றவருள் திரு சிவராவ் ஒருவர். அண்மையில் காலமாகி விட்ட இவர் அன்னிபெஸண்ட் அவர்களின் தூண்டுதலால் பத்திரிகைத் துறையில் பிரவேசித்தவர். நாளடைவில் பெரும் புகழ் பெற்ற சிவராவ் இந்து பத்திரிகையின் டில்லி நிருபராக நீண்ட காலம் பணியாற்றியபோது பெருந் தலைவர்கள் பலருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பு பெற்றார். இதனால் அறிவு வளத்துடன் மன வளமும் அனுபவமும் இணைந்தது. தொழிற் சங்க இயக்கத்தின் ஆரம்ப காலத்தில் தொழிலாளர் தலைவராகவும் விளங்கியிருக்கிறார். வட்ட மேஜை மகாநாட்டுக்குப் பிரிட்டிஷ் அரசாங்கத்தால் அழைக்கப்படும் பெருமை பெற்றார். நாடு விடுதலை பெறும் தருணத்தில் நமது அரசியல் சாசனத்தை அமைத்துத் தந்தவர்களுள் ஒருவராய் விளங்கினார். பின்னால் லோகசபை ராஜ்ய சபை அங்கத்தினராகப் பணியாற்றினார். காட்சிக்கும் பழகுவதற்கும் எளியரான பத்மபூஷண் திரு சிவராவ் மறையும் தருவாயில் தமது வாழ்க்கை வரலாற்றை எழுதி முடித்துள்ளார். அதன் மூலம் அவர் தம் ஆயுட் காலத்துக்குப் பிறகும் நாட்டுப் பணியாற்றி வருவார்.



---

ராஜாஜி சிந்தனை

### குரங்கின் வாலைவிட அசிங்கம்!

நாம் செய்யும் ஒவ்வொரு செயலும் நம்முடைய ஒழுக்கத்தைச் சாசுவதமாகப் பாதிக்கிறது. ஆகவே நாம் இரண்டு விதமான காரணங்களுக்காகத் தீமைக்கு அஞ்ச வேண்டும். இறந்த பின்னரும் நம்முடைய ஒழுக்கம் நம் ஆன்மாவுடன் செல்லும் என்று நம்புவோமானால், நம்முடைய ஒழுக்கத்தைத் தூயதாக வைத்துக் கொள்வது நூறு மடங்கு அதிக முக்கியமானதாகும். மற்றொரு காரணம் நாம் நம்முடைய தீமையால் நம்முடைய மனத்தை உடனேயே கெடுத்துக்கொள்கிறோம் என்பதாகும். பிறர் பொருளைக் கண்டு பொறாமைப்பட்டால் உடனே நமக்கோர் அசிங்கமான வால் முளைத்துவிடும் என்று வைத்துக் கொள்வோம். அப்படியானால் யாரும் பொறாமைப்பட மாட்டார்கள் அல்லவா? ஆனால் பிறர் பொருளுக்காகப் பொறாமைப்படுவதால் நம்முடைய ஒழுக்கத்தில் உண்டாகும் வால் குரங்கின் வாலைவிட அசிங்கமானதாகும். உடலில் வால் முளைப்பது அசிங்கமாயிருப்பதை விட அதிக அசிங்கமாகும் நம்முடைய தீய எண்ணங்களாலும் தீய செயல்களாலும் நம் ஒழுக்கம் பழுதாவது.

—சமயம் என்ற கட்டுரையில்

# உங்கள் அன்னையின் அறிவுரையை நம்புங்கள்




உங்கள் குழந்தை
அழும் போது
உங்கள் பாட்டி
சொன்னதைப் போலவே
உங்களையும்
உபயோகிக்கச் சொல்வார்
**உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டரை**

100 ஆண்டுகளுக்கும் மேலாக
தாய்க்குலம் நம்புவது



OPCM-1-75 TAM

# வையம் பரவிய வைதிக மதம்

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

உலகம் முழுக்க நம் மதச் சின்னங்கள் இருப்பதைப் பார்த்துவிட்டு, 'நம்மவர்களில் சிலர் இங்கேயிருந்து அங்கே போனார்கள், அந்தத் தேசத்தவர்கள் இங்கே வந்தார்கள், பலவித பரிவர்த்தனை (exchange) ஏற்பட்டது' என்று ஆராய்ச்சியாளர் சொல்கின்றனர். எனக்கோ ஆதியில் எல்லா இடத்திலும் ஒரே வேத தர்மம்தான் இருந்தது; இந்தச் சின்னங்கள் அங்கங்கேயே ஆதியில் இருந்தவர்களால் ஏற்பட்டவை என்றுதான் தோன்றுகிறது.

சரித்திரகாலம் என்று சொல்லப்படுகிற ஓர் இரண்டாயிர மூவாயிர வருஷத்துக்கு உட்பட்ட சான்றுகள் மற்ற தேசங்களில் கிடைப்பதைப் பார்த்து, இந்தியர்கள் அங்கெல்லாம் சென்று அங்குள்ள பழைய நாகரிகத்தை அகற்றிவிட்டு, அல்லது அதற்குள்ளேயே ஊறிப்போகிற மாதிரி நுழைந்து நாகரிகத்தைப் புகுத்தியிருக்கிறார்கள் - என்று ஆராய்ச்சியாளர்கள் சொல்கிறார்கள். ஆனால் நாலாயிரம் வருஷம், அதற்கும் முற்பட்ட காலங்களில் கூட வைதிக சின்னங்கள் பல தேசங்களில் இருந்திருக்கின்றன. அதாவது அந்தத் தேசங்களில் நாகரிக வாழ்வு (Civilization) தோன்றினபோதே, இந்த வைதிக அம்சங்கள் அங்கே இருந்திருக்கின்றன. இதற்குப் பிற்பாடுதான் அந்தத் தேசத்துப் பழங்குடிகளுக்கென்று ஒரு மதமே தோன்றியிருக்கிறது.

கிரீஸில் இப்படி ஒரு பூர்விக மதம், பல தெய்வங்களுக்குப் பெரிய பெரிய கோயில் கட்டி வழிபடுகிற மதம் உண்டாயிற்று. அதிலும் வைதிக சம்பந்தமான அம்சங்கள் இருக்கின்றன. கிறிஸ்துவுக்கு முற்பட்ட காலத்தில் அவர் வாழ்ந்த பகுதிகளில் இருந்த ஸெமிடிக் ஹீப்ரு மதங்களிலும் வேத மதத்தில் இருக்கிற அம்சங்கள் – ஒரு மாதிரி வர்ணாச்ரமப் பிரிவினை உட்பட – இருந்திருக்கின்றன. மெக்ஸிகோ போன்ற தேசங்களில் பழங்குடிகளுக்கு (Aborigines) ஒவ்வொரு மதம் உண்டு – அவர்களும் வேதத்தில் சொல்லியிருக்கிற மாதிரி இயற்கையின் ஒவ்வோர் அம்சத்திலும் தெய்வத் தன்மையைப் பார்த்து அவற்றை ஒவ்வொரு தேவதையாக வழிபட்டிருக்கிறார்கள். இந்த மதங்களில் எல்லாம் ஏகப்பட்ட சடங்கு (Ritual)களும் உண்டு. அவற்றில் வைதிக அம்சங்கள் நிறைய இருக்கின்றன.

நாகரிகத்தின் உச்சஸ்தானத்தில் இருந்த கிரீஸின் (ஹெலெனிக்) மதம் உள்பட பழைய நாகரிக மதங்கள் எதுவுமே இப்போது இல்லை. இங்கெல்லாம் அநேகமாக கிறிஸ்துவ மதமே இருக்கிறது. ஜப்பான் வரை, மத்திய ஆசிய, கிழக்காசிய நாடுகளில் பௌத்தம் பரவியிருக்கிறது. பல இடங்களில் இஸ்லாம் இருக்கிறது. தென், ஆப்பிரிக்க வனாந்தரம் மாதிரியான பகுதிகளில் மட்டும் அந்தந்தத் தேசத்து ஆதி (Original) மதம் என்று ஆராய்ச்சியாளர்கள் சொல்கிற Tribal மதங்கள் காட்டுக் குடிகளிடையில் மட்டும் இருக்கிறது. இப்படிப்பட்ட மிகப் பூர்விக மதங்களிலேயே வைதிக அம்சங்கள் இருக்கின்றன. ஓர் உதாரணம் சொல்கிறேன்.

அதற்கு முன்னால் ஒரு விஷயம். தத்துவங்களை விளக்குகிறபோது கதா ரூபம் (கதை உருவம்) கொடுப்பதுண்டு – அப்போதுதான் அவை சுலபமாகப் பாமர ஜனங்களுக்குப் புரியும். தத்துவம் அப்படியே பொதுஜனங்களிடம் ஏறாது. ஒன்று, கதா ரூபம் தர வேண்டும். அல்லது, ஒரு சடங்காக அதை ஆக்கிக் காரியத்தில் செய்யும்படியாகப் பண்ண வேண்டும். இம்மாதிரி சமய கர்மானுஷ்டானங்களைச் செய்யும்போதே அவற்றின் உள்ளே 'ஸிம்பாலிக்'காக இருக்கிற தத்துவங்கள் புரியும். 'சடங்குகள் எல்லாமே ரூபகம் (ஸிம்பல்)தான்; உள்பொருளைப் புரிந்து கொண்டாலே போதும்; சடங்கே வேண்டாம்' என்று சொல்கிறவர்களோடு நானும் சேர்ந்துகொண்டு இதைச் சொல்லவில்லை. தனிப்படச் சடங்கு என்று வைத்துக் கொண்டாலே அதற்குச் சக்தி உண்டுதான். இம்மாதிரியே, 'புராணக் கதைகள், தத்துவ விளக்கம் (allegory) மட்டுமேதான், அவற்றையே நிஜம் என்று நம்பக் கூடாது' என்றும் நான் சொல்ல வரவில்லை. வாஸ்தவத்திலேயே நடந்த உத்தமமான சரிதங்கள்தான் அவை. அதே சமயத்தில் தத்துவங்களையும் காட்டிக் கொடுக்கின்றன. அதே போல் காரியமாகச் செய்கிறபோதே நமக்கு ஒரு பலனைத் தந்து, பிறகு எந்தப் பலனும் கோராத சித்த சுத்தியைத் தந்து, சிரேயஸைத் தருகிறவையே சடங்குகள். இச்சடங்குகளுக்குள் தத்வார்த்தங்களும் இருக்கின்றன.

ஆனால் நாள்பட்ட வழக்கத்தில் இப்படிப்பட்ட கதைகள், அல்லது சடங்குகள் உள்ளுறைப் பொருளாக (inner meaning) இருக்கப்பட்ட தத்துவங்களிலிருந்து விலகிவிடக் கூடும்; அல்லது அதை மறந்தே போகக்கூடும்.

வெளி தேசங்களில் எத்தனையோ ஆயிரம் வருஷங்கள் மூலமான வேத மதத்தோடு சம்பந்தமே இல்லாமல் புதிய மதங்கள் வளர்ந்தபோது இப்படித்தான் வைதிக தத்துவங்கள் உருமாறியிருக்கின்றன.

நான் சொல்ல வந்த உதாரணத்துக்கு வருகிறேன்.

(தொடரும்)

---

[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள் ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது.]

# அனைவருக்கும் எமது புது வருட வாழ்த்துக்கள்!



இந்தப் புத்தாண்டில் எங்களது டிபாசிட் திட்டங்களில் பங்கு கொள்ளுங்கள்! வருங்காலத்தில் உங்கள் வாழ்வு வளம் மிகுந்ததாக விளங்க வழி வகுங்கள்!

## முத்துக்குவியல் டிபாசிட் திட்டம்:



உங்கள் செல்வ மகளின் திருமணம் சிறப்பாக நடைபெறவும், அருமை மைந்தனின் உயர்கல்விக்கு தேவையான பணம் சேமிக்கவும் உதவுவது எங்களது "முத்துக்குவியல் டிபாசிட்" திட்டம். ரூ. 1000/- மற்றும் ரூ. 1000/-த்தின் பெருக்குத் தொகைகளில் டிபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. 5 ஆண்டுகளுக்கு மேல் 21 ஆண்டுகள் வரை டிபாசிட் செய்து இத்திட்டத்தில் பயனடையலாம். இன்றே இத்திட்டத்தில் ரூ. 1000 முதலீடு செய்வீர்! வரும் ஆண்டுகளில் அத்தொகை வளர்ச்சி அடையும் விதம் பாரீர்!

| ஆண்டுகள் | திரும்பப்பெறும் தொகை ரூ. | அதிகரிக்கும் அளவு |
|---|---|---|
| 7 | 2,008/- | 2 மடங்கிற்கு மேல் |
| 14 | 4,034/- | 4 மடங்கிற்கு மேல் |
| 18 | 6,010/- | 6 மடங்கிற்கு மேல் |
| 21 | 8,105/- | 8 மடங்கிற்கு மேல் |



## ஓய்வுகால திட்ட சேமிப்பு:

மாதம் ரூ. 100/- வீதம் 5 ஆண்டுகள் செலுத்தி முடித்த பிறகு மாதம் ரூ. 165 - வீதம் 5 ஆண்டுகளுக்குத் திரும்பப் பெறலாம்.



## தினசரி சேமிப்புத் திட்டம்:

தினசரி ரூ. 1/- முதல் ரூ. 100/-வரை குறிப்பிட்ட தொகையை 5 ஆண்டுகள் செலுத்தி இறுதியில் ரூ. 2,280 முதல் ரூ. 2,28,000 வரை பெறலாம். தொகை செலுத்த வசதியாக எங்களால் நியமிக்கப்பட்ட நபர் தங்கள் இடத்திற்கு தினசரி வந்து சேமிப்புப் பணத்தை பெற்றுக் கொள்வார்.



## கேஷ் சர்டிபிகேட் டிபாசிட்:

ரூ. 100/-, ரூ. 500/-, ரூ. 1000/- திரும்பக் கிடைக்கும் வகையில் பல் வேறு வகை சர்டிபிகேட்டுகள் பெற்றுக் கொள்ளலாம். ரூ. 100/க்கு நீங்கள் செலுத்த வேண்டிய மிகக் குறைந்த தொகை ரூ. 13.62 தான்.



## பிக்சட் டிபாசிட் திட்டம்:

மிக உயர்ந்த வட்டி விகிதம்! 8½% முதல் 10% வரை வட்டி அளிக்கப்படுகிறது.

உங்களுக்குப் பணிபுரிய தமிழகத்தில் பல கிளைகள்





## தமிழ்நாடு மேர்க்கன்டைல் பேங்க் லிமிடெட்

(ஷெட்யூல்ட் பேங்க் — ஸ்தாபிதம் 1921)

56, பீச் ரோடு, தூத்துக்குடி 628 001

# ஒரு பிடி அவல்

வம்பன்



மூல்க்ராஜ் ஆனந்த் என்ற பிரபல ஆங்கில நாவலாசிரியருக்கு வயது எழுபது. பஞ்சாபில் பிறந்தவரான மூல்க்ராஜ் ஆனந்தின் பிறந்த நாள் விழா பிரிட்டனில் சமீபத்தில் நடைபெற்றது. இந்த விழாவில் பங்கு பற்றிய இந்திய ஹைகமிஷனர், திரு நட்வர் சிங், "சில ஆண்டுகளுக்கு முன்னால் ஆங்கிலம் இந்திய நாட்டில் இலக்கிய மொழியாகத் தழைக்காது என்று ஆர்வெல் என்ற நாவலாசிரியர் கூறினார். அவர் கூற்று பொய்யாகப் போய் விட்டது. ஆங்கிலம் இந்தியாவில் செழிக்கிறது!" என்று கூறினார். அவர் மூல்க்ராஜ் ஆனந்தை வைத்துக் கூறினார். ஸ்ரீமதி ஜாப்வாலாவின் நாவலுக்கும் சமீபத்தில் மிகச் சிறந்த இலக்கியப் பரிசு பிரிட்டனிலிருந்து கிடைத்திருக்கிறது.

• • •

சென்னையில் சோவியத் நாட்டுப் பெண்களைப் பற்றிய ஓர் அரிய புகைப்படக் கண்காட்சி அண்மையில் திறந்து வைக்கப்பட்டது. இவ்வைபவத்தில் கலந்துகொண்ட சினிமா நடிகை ஜமுனா தமக்கு ரஷ்யாவில் ஏற்பட்ட அனுபவத்தைக் குறிப்பிட்டார். பந்து ஆண்டுகளுக்கு முன்பு ருஷ்யாவில் நடைபெற்ற திரைப்பட விழாவுக்கு ஜமுனா நடித்த பதண்டி முந்துகு (முன்னேறுங்கள்) என்ற படமும் சென்றதாம். அத்துடன் இவரும் சென்றாராம். ஒரு நாள் ஏதோ ஓர் ஊரில் திரைப்படக் காட்சி முடிந்து ஜமுனா வெளியே வந்தாராம். ருஷ்யப் பெண்கள் அவரைச் சூழ்ந்து கொண்டு, "ஹரோஷ்" "ஹரோஷ்" என்று சொல்லிக் கொண்டே முத்தமிடத் தொடங்கினார்களாம். ஹரோஷ் என்ற ருஷ்யச் சொல்லுக்கு அழகு என்று பொருள். ஒருவேளை திரைப்படத்தில் பார்த்த ஜமுனாவை விட, நேரில் அதிக அழகாக இருப்பதாக ருஷ்யப் பெண்களுக்குத் தோன்றியதோ என்னவோ!

• • •

இந்தச் சந்தர்ப்பத்தில் ராஜாஜி சம்பந்தப்பட்ட ஒரு சம்பவம் நினைவுக்கு வருகிறது. 1959ல் சுதந்திரக் கட்சி பம்பாயில் தொடங்கியபோது, சினிமா நடிகர் பிரேம்நாத் ராஜாஜியிடமும் கட்சிக் கொள்கைகளிலும் பெரிதும் ஈடுபட்டிருந்தார். ஒரு நாள் மாலை ராஜாஜியையும் இன்னும் சில தலைவர்களையும் தமது வீட்டுக்கு அழைத்திருந்தார். ராஜாஜி சென்றதும் முதலில் அவரை, பிரேம்நாத்தின் மனைவியாரான ஸ்ரீமதி பீனாராய் வரவேற்றார். ராஜாஜியுடன் சென்றவர், "இவர் தான் பிரேம்நாத்தின் மனைவி பீனாராய். பிரபல சினிமா நடிகை!" என்று அறிமுகப்படுத்தினர்.

"இவர் சினிமா நடிகை என்று சொல்லுகிறீர்கள்?" என்று சந்தேகமாகக் கேட்டார் ராஜாஜி.

"ஆம்."

"நிஜமாகவா?"

"ஆம் — ஏன் இவ்வளவு சந்தேகப்படுகிறீர்கள்?" என்று உடன் இருந்தவர்கள் கேட்டார்கள்.

"ஏனெனில் சினிமாவில் நடிப்பதற்கு இவ்வளவு அழகு அவசியமில்லையே என்பதற்காகக் கேட்டேன்!" என்றார் ராஜாஜி.

அழகு என்பது வேறு, காமிராவுக்கு ஏற்ற முகவெட்டு என்பது வேறுதானே!

• • •

சோவியத் பெண்கள் புகைப்படக் கண்காட்சி திறப்பு விழாவில் கலந்து கொண்ட தமிழ் நாவலாசிரியை ஸ்ரீமதி ராஜம் கிருஷ்ணன் இவ்வாண்டுக்கான "சோவியத்லாண்டு நேரு பரிசை"ப் பெற்றிருக்கிறார். இப்பரிசு இவருக்கு சோவியத் நாட்டுக்கு விஜயம் செய்யும் வாய்ப்பை நல்கும். அவர் இவ்விழாவில் உரையாற்றியபோது, ருஷ்யாவுக்கே சென்று நடித்துவிட்டு வந்த நடிகை பத்மினி பற்றிக் குறிப்பிட்டார். அகில இந்திய ரேடியோ பேட்டியில் பத்மினியை நிருபர், "ருஷ்யத் திரையுலகில் மனுஷர்கள் எல்லாம் எப்படிப் பட்டவர்கள்?" என்று கேட்டாராம்.

"மனுஷர்களா? மனுஷிகள்தான் உண்டு மனுஷிகள்!" என்று பத்மினி பதில் கூறினாராம்.

ஆம், திரைப்படப் பிடிப்பு வேலைகள் மட்டுமின்றி, ஆடவர்களுக்கு என்று ஒதுக்கப்பட்ட வேலைகள் என்ற பேதமே இல்லாமல் அங்கு எல்லாவேலைகளையும் பெண்கள் செய்கிறார்கள். ஆகவே 'அகில உலக மாதர் ஆண்டு' என்பது இரண்டாவது உலக யுத்தம் தொடங்கியதிலிருந்தே ருஷ்யாவில் ஆரம்பமாகி விட்டது. போர்முனையில் நாட்டிலுள்ள ஏராளமான ஆடவர்கள் உயிர் இழக்கவே, ஆடவர்கள் செய்ய வேண்டிய பல பணிகளை மாதர்கள் செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

• • •

இவ்வைபவத்தில் பங்கு கொண்டு புகைப்படக் கண்காட்சியைத் திறந்து வைத்த ஸ்ரீமதி சாவித்திரி சபாநாயகம் தமது சகோதரிகளுக்குச் செய்த எச்சரிக்கையையும் இங்கு குறிப்பிட வேண்டும்.

"ஆண்களோடு பெண்களும் சரி நிகர் சமானமாக வாழ்வோம் என்று சொல்லிக் கொண்டு ஆடவர்களுக்குச் சமமாகச் சிகரெட் பிடிப்பது, குடிப்பது முதலிய கெட்ட பழக்கங்களை மேற்கொள்ள வேண்டாம்" என்றார்.

# உடலின் மேலோடு உள்ள தொல்லையை





## ஆழ்ந்து அகற்றும் களிம்பு–
## அமிர்தாஞ்சன் டெர்மல் ஆயின்ட்மென்ட்

சாதாரண களிம்புகள் சருமத்தின்
ஆழம்வரை எட்டாது. ஆனால் அமிர்தாஞ்சன் இதை எட்டும்
ஏனெனில், சக்திவாய்ந்த சரும நிவாரணிகளின்
அபூர்வக் கலவை இது. சாதாரண
சரும நோய்களின் ஆதாரத்தை
அது எட்டும்; உடனடியாக அகற்றும்;
இயல்பான ஆரோக்கிய சருமத்தை
வெளிப்படுத்தும்.

அமிர்தாஞ்சன் டெர்மல் ஆயின்ட்மென்ட்,
படை, சொரி, மற்றும் பல சரும
நோய்களுக்கும் ஏற்ற லட்சிய நிவாரணி.
இன்றே ஒன்று வாங்குங்கள்!




**அமிர்தாஞ்சன் லிமிடெட்** 14/15 லஸ் சர்ச் ரோடு, சென்னை 600 004

SAA AM/1906

# வட்ட மேஜை

கல்கி 9-11-75 இதழில் ''பொன்னியின் புதல்வர்'' தொடரில் ''ஔவையார் படத்தில் ஒரு காட்சி'' என்ற விளக்கப் படத்தில் இடம் பெற்றிருந்தது ''ஔவையார்'' படமல்ல; ஏ. பி. என்னின் ''திருவிளையாடல்'' படமாகும்.

கோயமுத்தூர்-1
7-11-75 அன்புதாசன்

தவற்றைச் சுட்டிக் காட்டிய அன்புதாசனுக்கு நன்றி. இதோ ஜெமினி ஔவையார் புகைப்படம்.

உதவி: பிலிம் நியூஸ் ஆனந்தன். —ஆசிரியர்

''சாதிகள் இல்லையடி பாப்பா'' எழுதிய ச. இராசரத்தினம் என்னை முந்திக்கொண்டார். நான் எழுத இருந்ததை அவர் எழுதி விட்டார். எனது தாமதத்துக்கு என் உடல் நிலையே காரணம். ஒரு விஷயம்: கட்டுரையில் கூறியுள்ளதைப் போல் டாக்டர் அம்பேத்கர் ஒருபோதும் இஸ்லாமியத்தைத் தழுவியவரல்லர். அவர் தழுவியது பௌத்த மதமேயாகும். பல ஆயிரக் கணக்கான தாழ்த்தப்பட்ட ஹிந்துக்களை ஒரே நாளில் பௌத்த மதத்தில் சேர்த்து ஜாதி ஹிந்துக்களை அதிர்ச்சிக்குள்ளாக்கினர்.

பெங்களூர்-38
24-11-75 அசோகன்

''பொன்னியின் புதல்வர்'' தொடரில் கல்கியின் பாடல்களைப் பற்றி எழுதும் போது (14-12-75 இதழ்) ஸ்ரீ சுந்தா அவர்கள் கல்கியை ''கவிஞர் – கல்கி (இப்படிச் சொன்னாலும் நன்றாய்த்தானிருக்கிறது)'' என்று கூறுகிறார். கதாசிரியர் கல்கி, கட்டுரையாளர் கல்கி, நாவலாசிரியர் கல்கி, பத்திரிகையாளர் கல்கி, வரலாற்று நவீன ஆசிரியர் கல்கி, விமர்சகர் கல்கி, பாடலாசிரியர் கல்கி, பேச்சாளர் கல்கி, நகைச்சுவையாளர் கல்கி, இப்படியே கூறிக் கொண்டு போனாலும் நன்றாகவே இருக்கிறது. எழுத்துத் துறையில் ஒவ்வொரு பிரிவிலும் தன்னிகரற்று விளங்கிய கல்கியை ''பேராசிரியர் கல்கி'' அல்லது ''எழுத்துலகச் சக்கரவர்த்தி'' என்று கூறினால், அதில் அத்தனையும் அடங்கிவிடும்.

கல்கியின் பல திறமைகளையும், அவரது குண இயல்புகளையும், வாழ்க்கைச் சம்பவங்களையும் ஸ்ரீ சுந்தா மிகவும் நேர்த்தியான முறையில் எழுதி வருகிறார். தமிழில் இத்துறையில் சுந்தா ஒரு புது சாதனையே ஏற்படுத்தி விட்டார். பாஸ்வெலது ஜான்சன் வாழ்க்கை, லாக் ஹார்ட்டது ஸ்காட் வாழ்க்கை, டிரிவில்யனது மெக்காலே வாழ்க்கை, போன்ற உயர் ரக வாழ்க்கை வரலாறுகள் போல, தமிழில் ''பொன்னியின் புதல்வர்'' (''சுந்தாவின் கல்கி'') அமைந்துள்ளது. இது முடிவு பெற்றவுடன், இந் நூலை பி. ஏ., அல்லது எம். ஏ.க்கு ஒரு பாட நூலாக ஆக்க வேண்டும்.

நெய்வேலி-3
12-12-75 யு. வைத்தியராமன்

'நல்ல நாளிலேயே நாழிப் பால், கன்று செத்தால் கேட்கவும் வேண்டுமா?' என்று ஒரு பழமொழி. சென்னை நகரின் சாலைகள் சாதாரண நாட்களிலேயே ஒரே மேடு பள்ளங்களைக் கொண்டு, சைக்கிள், ஸ்கூட்டர் போன்ற வாகனங்களில் செல்பவருக்குத் தொல்லை தரும். இப்போது, சமீபத்தில் பெய்த பலத்த மழையின் காரணமாகப் பள்ளங்கள் ஏராளமாகப் பரவியுள்ளன. போதாக்குறைக்குச் சாலை விளக்குகளும் எரியா.

இவை காரணமாக, நான் சில நாட்களுக்கு முன்பு என் உயிரையே இழக்கும் அபாயத்துக்கு உள்ளானேன். ஒரு பெரும் பள்ளத்தில் என் சைக்கிள் இறங்கி நான் சாலையின் நடுவே தூக்கி எறியப்பட்டேன். கடவுள் அருளால் பின்புறம் சைக்கிள்கள் தவிரப் பெரும் வாகனங்கள் ஏதும் அச்சமயம் வராமையால் சிறு காயங்களோடு உயிர் பிழைத்தேன்.

சென்னை – 23
18-12-75 வி. சௌந்தரராஜன்

''தானத்தில் சிறந்த தானம்'' என்ற தலைப்பில் ரத்த தானம் பற்றிய கட்டுரையைக் கல்கியில் படித்தோம். ரத்த தானம் செய்வோர் சங்கம் இங்கு மதுரை மருத்துவக் கல்லூரியைத் தலைமையகமாகக் கொண்டு நடந்து வருகிறது. நகரில் உள்ள பதினைந்து கல்லூரிகளின் ஒத்துழைப்பு கிடைத்துள்ளது. 1970ல் தொடங்கியதிலிருந்து இன்று வரை எர்ஸ்கின் ஆஸ்பத்திரிக்கு 2458 பாட்டில் ரத்தம் கொடுத்திருக்கிறோம்.

மதுரை ஆர். வி. அசோகன்
14-11-75 காரியதரிசி
ரத்த தானம் செய்வோர் சங்கம்



''பஸ் படிக்கட்டிலே நின்று பிரயாணம் செய்ததற்காக இரண்டு ரூபாய் அபராதம் கேட்டீங்களே! இருங்க.''

# கௌசிகன்

எழுதும் சித்திரத் தொடர் கதை





# அறிவின் விலை ஒரு கோடி



கல்கி ஜனவரி 11
சிறுகதைச் சிறப்பிதழில் ஆரம்பமாகிறது

அடுத்த வாரம் :

## சிறுகதைச் சிறப்பிதழ்

* போட்டிக் கதை :
  வேரில் பழுத்த பலா - கே. கே. ராஜன்
* மூன்று சிறப்புச் சிறுகதைகள்
  - ர. வேங்கடரத்னம்
  - ஜோதிர்லதா கிரிஜா
  - சிவசங்கரி
* ஒரு நாள் :
  பிரமுகர்கள் பலரது வாழ்வில் ஒரு நாள் வர்ணனை
* உமாபதியின் சிரிப்புப் பக்கங்கள்

மற்றும்

○ புதுக் கவிதை ○ அதிசயக் கனவு

# சிலிர்க்கச் செய்யும்

# சிங்கப்பூர்

நகாவலம்



▲ சிங்கப்பூர்-பறவைக் கண்ணோட்டம்

▼ சிங்கப்பூர் கச்சேரி



"மாட மாளிகைகளான குடியிருப்புக்களும் கண்ணைப் பறிக்கும் கடைகளும் உடைய சிங்கப்பூரை இன்று பார்க்கிறோம். ஆனால் வெறும் சேறும் சகதியுமாக விளங்கிய சிங்கப்பூரை ஒருவர் பார்த்திருக்கிறார்! அவர்தாம் திரு கோவிந்தசாமிப் பிள்ளை. எண்பத்தெட்டு வயதான இவர், தமது பதினேழாவது வயதிலேயே அங்கு சென்று குடியேறி, இன்றைக்கும் வாலிப உள்ளத்துடன் பல அலுவல்களைக் கவனிப்பவர். சிங்கப்பூரின் வளர்ச்சியுடன் இவரும் வயதிலும் வளத்திலும் வளர்ந்து இன்று பெரிய வர்த்தகப் பிரமுகராக விளங்குவதுடன் தர்மாத்மாவாகவும் பக்திமானாகவும் இருக்கிறார்."

"சிங்கப்பூரைப் பற்றிச் சொல்லுங்கள்" என்றதுமே ஸ்ரீமதி ராதா விசுவநாதன் மற்ற எல்லாவற்றையும் விட்டு விட்டு கோவிந்தசாமி பிள்ளையைப் பற்றிக்கூறவேண்டுமென்றால்அதிலிருந்தே அவர் எவ்வளவு உயர்ந்த மனிதர் என்பதை நாம் புரிந்து கொள்ள முடிகிறதல்லவா?

சிங்கப்பூர் — மலேஷியாவில் வாழும் பல்லாயிரக் கணக்கான இந்தியர்களின் மனங்களைத் தம் இன்னிசையால் குளிரச் செய்து திரும்பிய ஸ்ரீமதி எம். எஸ். அவர்களின் இந்தத் திக்விஜயம் பற்றிக் கூறுமாறு அவரது மகள் ஸ்ரீமதி ராதா விசுவநாதனை வேண்டுகிறோம்.

"சிங்கப்பூரில் மட்டும் பல ஆயிரம் மக்கள் அம்மாவின் கச்சேரிகளைக் கேட்டார்கள். முதலில் திட்டமிட்ட இரண்டுக்குப் பதில் மூன்றுகக் கச்சேரிகள் நிகழ்த்தியும், ஒவ்வொரு முறையும் அரங்கம் நிரம்பி வழிந்தும் போதவில்லை. ஏராளமான மக்கள் கேட்கக் கொடுத்து வைக்கவில்லையே என்று விசனத்துடன் திரும்பினார்கள். இதன் பொருட்டு மூன்றாவது கச்சேரியின் இடையில் திரு ராஜலிங்கம் நான்காவதாக ஒரு கச்சேரி மிகப் பெரிதான தேசிய அரங்கில் நிகழும் என்று அறிவித்தார். உடனே கட்டிடம் அதிரக் கரகோஷம் எழுந்தது. அது அடங்கியதும் ரசிகர்களின் ஆர்வத்தையும் வசதியையும் கருதிக் கட்டண விகிதங்களைத் தாம் குறைத்திருப்பதாகவும் சொன்னார். அவ்வளவுதான், காது செவிடாகி விடும்போல் அப்படிக் கைதட்டி மகிழ்ந்தார்கள்!"



◄ சிங்கப்பூர் நதி

ராஜலிங்கம் என்று ஸ்ரீமதி ராதா குறிப்பிட்டது ராஜலிங்கம் புரொடக்ஷன்ஸ் அதிபரை. இந்த நிறுவனம் பல்வேறு ஆசிய ஐரோப்பிய நாடுகளிலிருந்து இசைக் குழுக்களைத் தருவித்துச் சிங்கப்பூர் மலேஷியாவில் நிகழ்ச்சிகளை நடத்துகிறது. ராஜலிங்கம் குவாலாலம்பூரில் ஒரு தமிழ் பள்ளி நடத்தி வருகிறார். அதன் தலைமை ஆசிரியராகவும்

விளங்குகிறார். நீண்ட விடுமுறைக் 'காலங்களில் இத்தகைய கலைப் பணி புரிகிறார்.

'ஏதோ அழைக்கிறார், போகிறோம்' என்ற எண்ணத்துடன்தான் கிளம்பினார் ஸ்ரீ சதாசிவம் இசைக் குழுவினருடன். ஆனால் அங்கே ஒரு பாதப் பழக்கத்தில் ராஜலிங்கம், அவரது நேர்மை, ஒழுக்கம், நல்ல சுபாவம் ஆகியவற்றால் குடும்பத்தில் ஒருவராகி விட்டார். அவரை இப்பயணத்தின் முடிவில் பிரியும்போது கலங்கிய இசைக் குழுவினரின் கண்கள். இங்கே திரும்பி வந்து சேர்ந்த இரு நாட்களில் அவருக்கு மகன் பிறந்திருக்கும் செய்தி கிட்டிய மகிழ்ச்சியில்தான் தெளிவடைந்தன!

''சிங்கப்பூரில் நண்பர்களின் உற்சாகமான வரவேற்பு விருந்துபசாரத்துக்கு இடை சர்க்கும் விதமாக அதிகபட்ச அளவில் எப்படிப் பயன்படுத்தலாம் என்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது சந்தோஷா தீவு.''

''சிங்கப்பூரின் பிரதான வருமானமே சுற்றுலாப் பயணிகளால்தானே?''

''இல்லை. வர்த்தகம்தான். - ஆனால் அண்மைக் காலத்தில் விடுதலை பெற்ற பல நாடுகளும் இப்போது துறைமுக வசதிகளை அதிகரித்து வருவதால் சிங்கப்பூர் துறைமுகத்தின் முக்கியத்துவம் குறைந்து வருகிறது. தொழில் துறையில் அதிகமாகக் கவனம் செலுத்துகிறது அரசு.''

''சிங்கப்பூரில் எல்லாம் மலிவாகக் கிடைக்கும் என்பார்களே?''

''கிடைக்கும், ஏமாறாமல் இருந்தால்!'' என்றார் ஸ்ரீமதி ராதா விசுவநாதன். ''எந்தப்



தண்டாயுதபாணி ஸ்வாமி கோவிலில் சதாசிவம் தம்பதி தமது வருகையைப் பதிவு செய்கின்றனர்.



▲ பெருமாள் கோவிலில் ராஜகோபுரத் திருப்பணி முடிந்ததும் பிராகாரத்தை வலம் வருகின்றனர். பரிவட்டத்துடன் விளங்குபவர் கோவிந்தசாமிப் பிள்ளை

▼ கங்ஃபூ



யில் ஊரைச் சுற்றிப் பார்க்க அவகாசம் இருந்தது?'' என்று ஸ்ரீமதி ராதாவைக் கேட்கிறோம்.

''முழுக்கப் பார்க்கவில்லை.. முடிந்தமட்டில் பார்த்தோம். சிங்கப்பூரை அடுத்த சிறிய தீவை 'சந்தோஷா தீவு' என்று குறிப்பிடுகிறார்கள். பெயருக்கு ஏற்பச் சுற்றுலாப் பயணிகளின் மன மகிழ் தீவாகவே விளங்குகிறது. சிங்கப்பூரின் உயரமான குன்றிலிருந்து தீவின் மையத்துக்குப் போக ஆகாயத்தில் கம்பியில் தொங்கியபடி நகரும் பெட்டிகள் உள்ளன. இந்தக் 'கேபிள் கா'ரில் ஏறிச் செல்லும்போது சிங்கப்பூர் நகரம், துறைமுகம் முதலியவற்றைப் பறவைக் கண்ணோட்டத்தில் காணலாம். மெய்சிலிர்க்கச் செய்யும் இந்தக் காட்சி. சந்தோஷா தீவிலோ கடலாழக் காட்சிகளைக் கண்ணாடித் திரைக்குப் பின் புனர் நிர்மாணம் செய்து வைத்துள்ளார்கள். பவழக் காடுகளையும், விநோதமான கடல் வாழ் ஜந்துக்களையும் காணும்போது பிரமிப்பாக இருக்கிறது. தீவு நெடுகச் சோலைகளினூடே சாலைகள் உள்ளன. சிற்றுண்டி விடுதிகள் இருக்கின்றன. சிறிய தீவைச் சுற்றுலாப் பயணிகளை

பண்டம் வாங்குவதானாலும் சரி. நம்ம ஊர் காய்கறிக்காரியிடம் பேரம் பேசுவதை விடச் சாமர்த்தியமாக அங்கே நடந்துகொள்ள வேண்டும். ஏமாற்று மோசடிகளும் உண்டு.''

''அடப் பாவமே! சிங்கப்பூர் மக்கள் அப்படியா நடந்து கொள்கிறார்கள்?''

''உடனே தப்பாகக் கணக்குப் போடாதீர்கள். வியாபாரம் என்று வந்துவிட்டால் பணம் பண்ணுவது ஒன்றே குறியாகி விடுகிறது. மற்றப்படி சிங்கப்பூர் மக்களிடம் போற்றத்தக்க அம்சங்கள் பல உண்டு. சோம்பிக் கிடக்கும் ஒரு மனுஷனைப் பார்க்க முடியாது. பரபரவென்று ஏதாவது காரியம் பண்ணிக் கொண்டே இருக்கிறார்கள்.''

''சீனர்கள்தாம் அதிகமோ?''

''ஆமாம். எண்பது சதவிகிதம். பாக்கி இருபது சதவிகிதத்தில் மலேஷியர்களும், தமிழர்களும் ஆங்கிலோ இந்தியர்களும் அடக்கம். தமிழர்களில் பெரும்பாலோர் இலங்கையிலிருந்து குடியேறியவர்களே!''

''குறிப்பாக உங்கள் கவனத்தை ஈர்த்த அம்சங்கள் என்ன?''

''ஐந்து நட்சத்திர ஹோட்டல்கள் பல இருந்தாலும் பாதையோர உணவு விடுதிகள் ஏராளம். இவற்றில் இரவு இரண்டு மணி மூன்று மணிக்குக் கூட அயல்நாட்டுச் சுற்றுலாப் பயணிகளின் வாய்க்கு ருசியான எல்லாம் கிடைக்கும். ஒவ்வொரு உணவு விடுதியையும் ஒரு சீனக் குடும்பம் நடத்துகிறது. இப்படி ஏராளமான உணவு விடுதிகள் இரவெல்லாம் வியாபாரம் செய்தும் விடியற்காலை ஐந்து மணிக்குப் பார்த்தால் நடைபாதைகள் சுத்தமாக இருக்கும். சாலையில் யாராவது குப்பை போட்டால் இருநூறு ரூபாய் அபராதம்!''

''ஐயோ!'' என்று பதைக்கிறோம் நாம்.

''கடுமையான தண்டனைதான். அதனால் பலனும் இருக்கிறது'' என்றார் ராதா. ''சாலையில் இரு கார்கள் மோதிக் கொண்டால் யார்பேரில் தப்பு என்று பார்க்கமாட்டார்கள். இரண்டு பேருக்குமே அபராதம் விதித்து விடுகிறார்கள். காரணம் என்ன தெரியுமா? இரண்டு பேருமே போக்கு வரத்துக்குத் தடை ஏற்படுத்துவதாக அரசாங்கம் கருதுகிறது! ஆக, இந்தத் தொல்லையே வேண்டாம் என்று விபத்து நடந்த மறு கணம் இரு கார் சொந்தக்காரர்களும் கீழே இறங்கி விலாசப் பரிமாற்றம் செய்து கொண்டு உடனே புறப்பட்டு விடுகிறார்கள். அப்புறம் சாவகாசமாகச் சந்தித்துப் பேசி வழக்கைச் சமரசமாகத் தீர்த்துக் கொள்கிறார்கள். தவறு செய்தவர் மறு தரப்புக்கு நஷ்ட ஈடு தந்துவிடுகிறார். கார் ஹாரன் சத்தத்தைக் கேட்கவே முடியாது. ஹாரன் அடித்தால் கடுமையான அபராதம்.''

''சிவா! இதை விடக் கார் ஓட்டவே தடை விதித்து விடலாம் போலிருக்கே!''

''அந்தத் தடையும் உண்டு! நகரின் நெருக்கடி மிகுந்த இடங்களில் குறிப்பிட்ட நேரங்களில் ஐந்தாறு பேர் ஏறியுள்ள கார் மட்டும்தான் போகலாம். ஓரிருவர் பயணம் செய்யும் கார்களுக்குத் தடை! குறைந்த பட்ச இடத்தை அதிகபட்ச மக்கள் பயன்படுத்த இந்த ஏற்பாடு. எனவே நகர்ப்புறத்துக்கு வெளியே காரை நிறுத்திவிட்டு நண்பரின் காரில் ஏறி வருவார்கள். அல்லது பொதுமக்களுக்கான வாகனங்களைப் பயன்படுத்துவார்கள்.''

''சிங்கப்பூரில் உள்ளனவற்றைச் சொன்னீர்கள்; அங்கே இல்லாதது, கிடைக்காதது என்று ஏதாகிலும் உண்டா?''

''ஏன் இல்லை? அங்கே மாடுகள் இல்லை. எனவே கறந்த பால் கிடைக்காது. பெரும்பாலும் பவுடர் பால்தான். குடிதண்ணீர் இல்லை! தண்ணீரெல்லாம் மலேஷியாவிலிருந்துதான் வருகிறது! சாலைகளில் தூசி இல்லை! கார்களில் அழுக்கு இல்லை! காரைத் துடைக்காமல் ஓட்டினால் கடுமையான அபராதம். நகரின் அழகு கெட்டு விடுகிறதாம்! சிங்கப்பூருக்குப் போதிய அளவு நிலப்பரப்பு இல்லை. எனவே கரையோரமாகக் கடலைத் தூர்த்து நிலத்தை மீட்க முயல்கிறார்கள்!''

வியப்பை விழுங்கிவிட்டு, ''மக்களின் வாழ்க்கைத்தரம் எப்படி இருக்கிறது?'' என வினவுகிறோம்.

''திருப்திகரமாக உள்ளது. நடுத்தரக் குடும்பங்களில் கார், ஃப்ரிஜ், மின்சாரச் சமையல் உபகரணங்கள் எல்லாம் இருக்கின்றன. வீட்டுக் காரியங்களைச் செய்ய வேலைக்காரர் கிடைப்பதில்லை. வாழ்க்கைத்தர உயர்வுக்கு இதுவே அத்தாட்சி அல்லவா?''

''வரிகள்...?''

''உண்டு. ஆனால் ஒப்புநோக்குகையில் பிற பல நாடுகளைவிட மிகவும் குறைவுதான்.''



மஹா லக்ஷ்மி லயன் ஆர்ட்ஸின் ஆதரவில் வாணி மஹாலில் நடைபெற்ற குமாரி சுஜாதா ராஜனின் பரத நாட்டிய நிகழ்ச்சி ரசிகர்களிடையே அமோகமான பாராட்டுதலைப் பெற்றது. நவராக மாலிகை வர்ணத்தை செல்வி சுஜாதா அற்புதமான ஜதிக்கோவைகளுடன் அயர்வின்றி அருமையான முகபாவங்களுடன் ஆடிக் காட்டினார். ஸ்ரீமதி இந்திரா ராஜன் நட்டுவாங்கமும் அவையோரால் மிகவும் பாராட்டப் பட்டது.



பம்பாய் டையர் கம்பெனியின் பொது ஜனத் தொடர்பு அதிகாரி திரு கே. எஸ். நீலகண்டன் அவர்களின் புதல்வி சௌ. லதாவின் பரத நாட்டிய அரங்கேற்றம் பம்பாய் சண்முகானந்தா ஹாலில் சமீபத்தில் நடைபெற்றது. பம்பாய் நகரப் பிரமுகர்கள் குமாரி லதாவின் நடனச் சிறப்பை வியந்து பாராட்டினர். பத்திரிகைகள் பலவும் புகழ்மாலை சூட்டின. இந்தப் பெருமையை யெல்லாம் ராஜராஜேசுவரி பரதநாட்டிய கலாமந்திர் குரு குப்பையா பிள்ளையிடமே சமர்ப்பித்து ஆசி கோருகிறார் குமாரி லதா.

''பிரபலஸ்தர்களான பலரைச் சந்தித்திருப்பீர்களே?''

''அயல் விவகார மந்திரி திரு ராஜரத்தினம், அம்மாவின் கச்சேரிக்கு வருவதாக இருந்தார். அவசர அலுவல் ஏதோ முளைத்ததால் வராதிருந்து விட்டார். பிறகு வீட்டுக்கு அழைத்து உபசரித்தார். அம்மா அவருக்காக இரண்டு பாட்டுக்களைப் பாடினாள்.

''நமது நாட்டின் தூதர் திரு சித்தார்த்தாச்சாரி பொறுப்பேற்று ஒரு வாரம்தான் ஆகியிருந்தது. ஆனாலும் அம்மாவுக்காக ஒரு விருந்துபசாரம் ஏற்பாடு செய்தார். முக்கியஸ்தர்களான சுமார் நூறு பேர் வந்திருந்தார்கள்.''

''சிங்கப்பூர்வாசிகள் கச்சேரிகளை எப்படி ரசித்தார்கள்?''

''அவர்கள் ரசனையை அந்த ஊர் மழைக்கு ஒப்பிடலாம். சடபடவென்று பெய்யும். அடுத்த விநாடி துடைத்து விட்டாற்போல் இருக்கும். அப்படி பாட்டு முடிந்ததும் கரகோஷம். அடுத்த விநாடி பூரண அமைதி. விதி விலக்காகப் பாட்டின் ஆரம்பத்திலேயே ஒருமுறை கைதட்டினார்கள். அது 'காற்றினிலே....' என்று தொடங்கியபோது. கண்டதேவி அழகிரிசாமியும் காரைக்குடி மணியும் விநாயகராமும் பூரண ஒத்துழைப்புத் தந்தது மட்டுமல்ல; அவரவரும் தனித் தனியே பெரு மதிப்புக்கும் பாராட்டுக்கும் பாத்திரரானார்கள். கச்சேரி விமர்சனங்களில் உரிய இடம் பெற்றதோடு அவர்களை நிருபர்கள் தனியே பேட்டி கண்டும் எழுதினார்கள். டெலிவிஷனிலும் அவர்களுக்குத் தனியே பேட்டி நிகழ்ச்சிகள் இருந்தன. இதிலிருந்தே சிங்கப்பூர்வாசிகளின் மனங்களை இவர்கள் வாசிப்பு எந்த அளவுக்குக் கொள்ளை கொண்டது என்று உணரலாம். ரேடியோ, டெலிவிஷன் கச்சேரிகளும் இருந்தன.''

''அப்பாவும் அம்மாவும் சிங்கப்பூரிலிருந்த கோயில்களுக்கெல்லாம் போகாமல் இருந்திருக்க மாட்டார்களே!''

''எல்லாவற்றுக்கும் போக முடியாத எண்ணிக்கையில் கோயில்கள் சிங்கப்பூரில் உள்ளன. முக்கியமான சிலவற்றுக்குப் போனோம். பெருமாள் கோயிலில் ராஜ கோபுரத் திருப்பணி துவக்கம். சிங்கப்பூருக்கு வந்து சேர்ந்த சந்தர்ப்பப் பொருத்தம் பற்றி எண்ணி மகிழ்ந்து அம்மா அங்கே பாடினாள். அப்புறம் ராமகிருஷ்ண மடத்தின் 'ஆரத்தி'யிலும் பகவான் சத்ய சாயிபாபாவின் ஐம்பதாவது ஜெயந்தி விழாவிலும் கலந்துகொண்டு பாடினாள்.''

''இன்னும் அதிசய விஷயம் ஏதாவது..?''

''இருக்கிறதே'' என்றார் ஸ்ரீமதி ராதா சளைக்காமல். ''சிங்கப்பூர் தாவர இயல் பூங்காவில் குரங்குகள் நம்முடன் சேர்ந்து போட்டோ எடுத்துக் கொள்கின்றன. நாம் தரும் கடலையைப் பெற்றுக் கொண்டதும் நம்மருகே அமர்ந்து காமிராவுக்கு 'போஸ்' கொடுக்கின்றன. இந்த அதிசயம் போதாதென்றால் தமிழ் இங்கே பள்ளிகளில் கட்டாய பாடமாக உள்ளது என்பதைக் குறித்துக் கொள்ளுங்கள். சீனம், ஆங்கிலம், மலாய், இந்திய மொழிகளில் தமிழ் ஆகிய நான்கும் அரசினரால் அங்கீகரிக்கப் பட்டவையாகும்.''

''வியப்புக்குரிய விஷயங்கள்போல் அதிசய மனிதர்களையும் சந்தித்திருப்பீர்களே?''

''ஓ! ஆன்டனி ஒரு கட வித்வான். உள்ளூர் கலைஞர்களின் நிகழ்ச்சிகளில் பங்கு கொள்கிறார். அதுமட்டுமா? இவரே இரண்டு பாக்கெட்டுகளிலும் இரண்டு துப்பாக்கிகளுடன் வளையவருகிறார்! காரணம் துப்பறியும் நிபுணரான இவருக்கு எதிரிகள் அதிகம். சிங்கப்பூரில் கடுமையான தண்டனைக்குப் பயந்து லஞ்ச ஊழல்கள் மிகவும் குறைந்து விட்டன. ஆனாலும் கொஞ்ச நஞ்சம் பாக்கியுள்ள லஞ்ச ஊழல்களைக் கண்டு பிடிப்பதில் தீவிரம் காட்டுகிறார் இந்த 'ஜேம்ஸ்பாண்ட்' ஆன்டனி.

''பத்திரிகைகளில் பெரும்பாலும் குத்து, கொலை, துப்பாக்கிச் சூடு பற்றிய செய்திகள் தாம். தமிழ்ப் பத்திரிகைகள், இந்திய, அதிலும் தமிழகச் செய்திகளுக்கு இடம் ஒதுக்குகின்றன. அதிலும் முக்கியத்துவம் பெறுபவை தி.மு.க. அ.தி.மு.க. செய்திகளும் சினிமாச் செய்திகளும்தாம்.''

''பத்திரிகைகள் தரும் முக்கியத்துவத்தை யொட்டி சமுதாயத்தின் வாழ்க்கை அமைந்து விடுவதில்லைதான். என்றாலும் நீங்கள் சொல்வதெல்லாம் பார்த்தால் சிங்கப்பூருக்குப் போகு முன்னர் ஒருவர் கராட்டே, ஜூடோ எல்லாம் கற்றுக்கொள்வது நல்லது என்று தோன்றுகிறதே!''

''தற்காப்புக் கலை பயில்வதை யார் ஆட்சேபிக்க முடியும்?'' என்றார் ஸ்ரீமதி ராதா விசுவநாதன். ''ஆனால் ஜூடோ கராட்டே எல்லாம் அங்கே பழைய விஷயங்களாகி விட்டன. நவீன தற்காப்புக் கலையின் பெயர் கங்பூ! அதைப் பயிலுங்கள்!''

அடுத்த வாரம்: **மலேஷியா**

## நாற்பத்தொன்பதாம் அத்தியாயம்

# பட்டணப் பிரவேசம்

கமலி முன் தடவையைக் காட்டிலும் இந்தத் தடவை தங்கை சிவகாமியிடம் அதிக அன்பும் ஆதரவும் காட்டினாள்.

முன் தடவை அவள் கண்ணனுடைய அகால மரணத்தைப் பற்றி அப்போது தான் கேள்விப்பட்டபடியால் அழுகையும் அலறலும் ஆத்திரமும் ஆங்காரமுமாக இருந்தாள். அடிக்கடி சிவகாமியைப் பார்த்து, ''அடி பாதகி! உன்னையும் கெடுத்துக் கொண்டு என்னையும் கெடுத்துவிட்டாயே ! நீ முன்னமே செத்திருக்கக் கூடாதா ?'' என்று திட்டினாள். சிவகாமி பொறுமையாக இருந்ததுடன் தானும் அவளோடு சேர்ந்து அழுது தன்னைத் தானே நொந்து கொண்டும் திட்டிக் கொண்டும் கமலிக்கு ஒருவாறு ஆறுதல் அளித்தாள்.

இந்த முறை கமலி சிறிது ஆறுதலும் அமைதியும் அடைந்திருந்தாள். வாதாபியில் சிவகாமியின் வாழ்க்கையைப் பற்றி விவரமாகச் சொல்லும்படி வற்புறுத்தினாள். கண்ணன் மரணம் அடைந்த வரலாற்றைப் பற்றியும் விவரமாகக் கேட்டுத் தெரிந்து கொண்டாள். கண்ணனுடைய உயர்ந்த குணங்களைப் பற்றியும் கமலியிடம் அவன் கொண்டிருந்த அளவில்லாக் காதலைப் பற்றியும் மூச்சு விடாமல் அந்தத் தோழிகள் பேசிக் கொண்டிருந்தார்கள்.

அச்சமயம், வெளியிலே போயிருந்த சின்னக் கண்ணன், ''அம்மா! அம்மா!'' என்று கூவிக் கொண்டு உள்ளே ஓடிவந்தான். கமலி அவனை வாரி அணைத்துக் கொண்டு, ''தங்காய் ! இனிமேல் உனக்கும் எனக்கும் இந்தப் பிள்ளைதான் கதி. இவன் வளர்ந்து பெரியவனாகித் தான் நம் இருவரையும் காப்பாற்ற வேண்டும் '' என்றாள்.

அதைக் கேட்டதும் சிவகாமிக்குச் 'சுரீர்' என்றது. கமலி அக்கா ஏன் இப்படிச் சொல்கிறாள்! அவள் கணவனை இழந்த காரணத்தினால் தானும் அவளைப் போலவே ஆகிவிட வேண்டுமா ? மாமல்லரையும் அவருடைய இன்பக் காதலையும் தான் வெறுத்துவிட வேண்டுமா ?

இவ்விதம் சிவகாமி எண்ணமிட்டுக் கொண்டிருந்த போது வீதியில் வாத்திய முழக்கங்களும், ஜய கோஷங்களும், ஜனங்களின் கோலாகல த்வனிகளும் கலந்த ஆரவாரம் கேட்டது.

ஏற்கனவே ஆயனர் மூலமாகச் சக்கரவர்த்தியின் பட்டணப் பிரவேச ஊர்வலத்தைப் பற்றிச் சிவகாமி தெரிந்து கொண்டிருந்தாள். அதைப் பார்க்க வேண்டும் என்று அவளுக்கு மிக்க ஆவலாயிருந்தது.

''அக்கா ! நாமும் பலகணியருகில் போய் ஊர்வலத்தைப் பார்க்கலாம் !'' என்றாள்.

''உனக்கும் எனக்கும் பட்டணப் பிரவேசமும் ஊர்வலமும் என்ன வேண்டிக் கிடக்கிறது ? பேசாமலிரு!'' என்றாள் கமலி.

கண்ணனை இழந்ததனால் மனம் கசந்து போய்க் கமலி அப்படிப் பேசுகிறாள் என்று சிவகாமி நினைத்தாள்.

''என்ன அப்படிச் சொல்கிறாய் அக்கா ! சக்கரவர்த்தி என்னுடைய, சபதத்தை நிறைவேற்றுவதற்காக எத்தனை பாடுபட்டார் ! அவருடைய விஜயோற்சவத்தை நகரத்து மக்கள் எல்லாம் கொண்டாடும் போது நாம் மட்டும்......''

கமலி குறுக்கிட்டு, ''நீயுமாச்சு, உன் சபதமும் ஆச்சு, உன் சக்கரவர்த்தியும் ஆச்சு ! அடி பைத்தியமே ! உனக்கு மானம், ரோஷம் ஒன்றுமில்லையா ? வாதாபியிலேயே எல்லாவற்றையும் பறிகொடுத்து விட்டு வந்தாயா ?'' என்றாள்.

கமலி இப்படிப் பேசியது சிவகாமிக்குச் சிறிதும் விளங்காமல் மேலும் மனக் குழப்பத்தை அதிகமாக்கிற்று.

கமலி மேலும், ''அடி தங்காய் ! நீயும் மாமல்லரும் கல்யாணம் செய்து

கொண்டு தங்க ரதத்தில் நவரத்தினக் குடையின் கீழ் உட்கார்ந்து ஊர்வலம் வர, உன் அண்ணன் ரதம் ஓட்டும் காட்சியைக் கண்ணால் பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்டேனே! அது நிராசையாகிப் போய் விட்டதே!'' என்று கண்ணில் நீர் ததும்பக் கூறிய போது, அவள் கண்ணன் மரணத்தை எண்ணித்தான் இப்படி மனம் கசந்து பேசுகிறாள் என்று சிவகாமி மௌனமாயிருந்தாள்.

சற்று நேரத்துக்கெல்லாம் ஊர்வலம் அருகிலே வந்து விட்டதாகத் தோன்றியதும் சிவகாமி தனது ஆவலை அடக்க முடியாதவளாய் எழுந்து பலகணியை நோக்கிச் சென்றாள். கமலியும் அவளைத் தொடர்ந்து போனாள்.

வீதி வழியே வந்த சக்கரவர்த்தியின் பட்டணப் பிரவேச ஊர்வலம் கண் கொள்ளாக் காட்சி யாயிருந்தது.

ஊர்வலத்தின் முன்னணியில் ஜய பேரிகைகளை முதுகில் சுமந்து சென்ற பிரம்மாண்டமான ரிஷபங்களும், அலங்கார யானைகளும் குதிரைகளும், ஒட்டகங்களும் அவற்றின் பின்னால் பல வகை வாத்திய கோஷ்டிகளும், கொடிகளும் விருதுகளைத் தாங்கிய வீரர்களும் போவதற்கு ஒரு நாழிகைக்கு மேல் ஆயிற்று.

பிறகு அரபு நாட்டிலேயிருந்து வந்த அழகிய வெண் புரவிகள் பூட்டிய சக்கரவர்த்தியின் தங்கரதம் காணப்பட்டதும், வீதியின் இருபுறத்து மாளிகை மாடங்களிலிருந்தும் குடிமக்கள் புஷ்ப மாரி பொழிந்தார்கள். மங்களகரமான மஞ்சள் அரிசியும் நெல்லும் பொரியும் தூவினார்கள். இனிய மணம் பொருந்திய சந்தனக் குழம்பை வாரித் தெளித்தார்கள். ''வாதாபி கொண்ட மாமல்லச் சக்கரவர்த்தி வாழ்க! வீராதி வீரர் நரசிம்ம பல்லவேந்திரர் வாழ்க!'' என்பன போன்ற எத்தனையோ விதம் விதமான ஜயகோஷங்கள் வானத்தை எட்டும்படி பதினாயிரம் குரல்களிலே எழுந்தன.

சக்கரவர்த்தியின் ரதம் அருகில் வந்துவிட்டது என்று அறிந்ததும் சிவகாமியின் இருதயம் வேகமாக அடித்துக் கொள்ள ஆரம்பித்தது. தங்க ரதத்திலே பூட்டிய அழகிய வெண் புரவிகளையே சற்று நேரம் அவள் பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு மிக்க பிரயத்தனத்துடன் கண்களைத் திருப்பி அந்தத் தங்க ரதத்திலே அமைந்திருந்த இரத்தின சிம்மாசனத்தை நோக்கினாள்.

ஆகா! இது என்ன? சக்கரவர்த்திக்கு அருகிலே அவருடன் சரியாசனத்திலே வீற்றிருக்கும் அந்தப் பெண்ணரசி யார்?

சிவகாமியின் தலை சுழன்றது! பலகணி வழியாக வீதியிலே தெரிந்த வீடுகள் எல்லாம் சுழன்றன; தங்க ரதம் சுழன்றது; அதற்கு முன்னும் பின்னும் வந்த யானை, குதிரை, பரிவாரங்கள் எல்லாம் சுழன்றன; கூட்டமாக வந்த ஜனங்களும் சுழன்றார்கள்.

சிவகாமி சுவரைக் கையினால் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு மறுபடியும் நன்றாகப் பார்த்தாள். உண்மைதான்; அவளுடைய கண்கள் அவளை ஏமாற்றவில்லை.

மாமல்லருக்குப் பக்கத்திலே ஒரு பெண்ணரசிதான் உட்கார்ந்திருக்கிறாள். ஆஹா! எத்தகைய அழகி அவள்! முகத்திலேதான் என்ன களை! ரதியோ, இந்திராணியோ, அல்லது மகாலக்ஷ்மியே தானோ என்றல்லவா தோன்றுகிறது!

''அவள் யார் அக்கா? சக்கரவர்த்தியின் பக்கத்திலே உட்கார்ந்திருக்கிறவள்?'' என்ற வார்த்தைகள் சிவகாமியின் அடித் தொண்டையிலிருந்து கம்மிய குரலில் வெளிவந்தன.

''இது என்ன கேள்வி? அவள்தான் பாண்டியகுமாரி. மாமல்லரின் பட்டமகிஷி. வேறு யார் அவர் பக்கத்தில் உட்காருவார்கள்?'' என்றாள் கமலி.






''அரே... வட்டி இல்லேன்னு சர்க்கார் சட்டம் போட்டாங்கோ! நம்பள் கடன் கொடுக்கிறான் இல்லே!... நம்பள் அடகுக் கடையை அடகு வைக்கிறான்... நிம்பள் கடன் கொடுக்கிறான்?''

---

''அக்கா! அவருக்குக் கல்யாணம் ஆகிவிட்டதா? எப்போது?'' என்ற சிவகாமியின் கேள்வியில் எல்லையில்லாத ஆச்சரியமும் ஆசாபங்கமும் மனக் குழப்பமும் கலந்து தொனித்தன.

''அடி பாவி! உனக்குத் தெரியாதா என்ன? யாரும் சொல்லவில்லையா! உனக்கு எல்லாம் தெரியும் என்றல்லவா நினைத்தேன்! மாமல்லருக்குக் கல்யாணம் ஆகி வருஷம் ஒன்பது ஆயிற்றே? அந்தச் சதிகார மகேந்திர பல்லவன், மகனுக்குக் கல்யாணத்தைப் பண்ணிவிட்டுத்தானே கண்ணை மூடினான்!'' என்றாள் கமலி.

''அவரை ஏன் திட்டுகிறாய், கமலி! நல்லதைத்தான் செய்தார் மகேந்திரர்! இப்போதுதான் எனக்கு உண்மை தெரிகிறது; என்னுடைய அறிவீனமும் தெரிகிறது!'' என்று சிவகாமியின் உதடுகள் முணுமுணுத்தன.

''என்னடி உளறுகிறாய்? மகேந்திரர் நல்லதைச் செய்தாரா? குடி கெடுக்க அஞ்சாத வஞ்சகராயிற்றே அவர்?'' என்றாள் கமலி.

சிறிது நேரம் வரையில் சிவகாமி கண்ணைக் கொட்டாமல் இராஜ தம்பதிகளைப் பார்த்த வண்ணம் நின்றாள்.

தங்க ரதம் மேலே சென்றது. அடுத்தாற்போல் பட்டத்து யானை வந்தது. அதன்மேல் அமர்ந்திருந்த குழந்தைகளைப் பார்த்து, ''இவர்கள் யார்?'' என்றாள் சிவகாமி.

''வேறு யார்? பல்லவ குலம் தழைக்கப் பிறந்த பாக்கியசாலிகள்தான். மாமல்லருக்கும் பாண்டிய குமாரிக்கும் பிறந்த குழந்தைகள். மகனுடைய பெயர் மகேந்திரன்; மகளின் பெயர் குந்தவி. இதெல்லாம் உனக்குத் தெரியவே தெரியாதா?''

சிவகாமி மேலே ஒன்றும் பேசவில்லை. அவளுடைய உள்ளம், 'ஆகா! அப்படியானால் பல்லவ குலத்தின் சந்ததியைப் பற்றிக்கவலையில்லை!' என்று எண்ணியது.

அதே சமயத்தில் அவளுடைய இருதயத்தில் ஏதோ ஒரு நரம்பு 'படார்' என்று அறுபட்டது.

பட்டத்து யானைக்குப் பின்னால் இன்னொரு யானை வந்தது. அதன் அம்பாரியில் புவன மகாதேவியும் மங்கையர்க்கரசியும் இருந்தார்கள்.

''இராஜ மாதாவுக்கு அருகில் உள்ள பெண்ணைப் பார்த்தாயா, சிவகாமி! அவளுக்கு அடித்த குருட்டு யோகத்தை என்னவென்று சொல்லட்டும்? பழைய சோழ குலத்தைச் சேர்ந்தவளாம். மங்கையர்க்கரசி என்று பெயராம். நெடுமாற பாண்டியனை இந்த அதிருஷ்டக்காரி மணந்து கொள்ளப் போகிறாளாம். எப்படியும் இராஜ குலத்திலே பிறந்தால் அந்த மாதிரி வேறேதான்!'' என்று சொல்லி வந்த கமலி, சிவகாமி அங்கேயிருந்து நகர்ந்து செல்வதைப் பார்த்து, ''அடியே ஏன் போகிறாய்?'' என்றாள்.

உண்மையில், கமலி கடைசியாகச் சொன்னது ஒன்றும் சிவகாமியின் காதில் விழவில்லை. பட்டத்து யானை மீதிருந்த குழந்தைகளையே பார்த்துக் கொண்



டிருந்துவிட்டு, அந்த யானை நகர்ந்ததும் பலகணியின் பக்கத்திலிருந்து புறப்பட்டுச் சென்றாள். வீட்டு முற்றத்தின் ஓரத்தில் உட்கார்ந்து வெகு நேரம்வரை சித்தப் பிரமை கொண்டவள் போலச் சிலையாகச் சமைந்திருந்தாள்.

ஊர்வலம் முழுவதும் போன பிறகு கமலி அவளிடம் வந்து சேர்ந்தாள். "அடி, பெண்ணே! ஏன் இப்படி உட்கார்ந்திருக்கிறாய்? ஒரு குரல் அழுது தொலையேன். சக்கரவர்த்தியைக் காதலித்ததனால் என்ன? அழுவதற்குக் கூடவா உனக்குப் பாத்தியதை இல்லாமற் போயிற்று?" என்று கேட்டாள்.

சிவகாமிக்கு எங்கிருந்தோ திடீரென்று அழுகை வந்தது! வறண்டிருந்த கண்களில் கண்ணீர் வெள்ளமாகப் பெருகத் தொடங்கிற்று.

கமலியின் மடியில் குப்புறப் படுத்துக்கொண்டு விம்மி விம்மி அழுதாள். ஒரு நாழிகை நேரம் அழுத பிறகு விம்மல் நின்றது. கண்ணீரும் ஓய்ந்தது.

சிவகாமியின் இருதயத்திலேயிருந்து ஒரு பெரிய பாரம் இறங்கி விட்டது போலத் தோன்றியது. இதற்கு முன் அவள் என்றும் அறியாத அமைதியும் சாந்தமும் உள்ளத்திலே குடிகொண்டன.




"தீபாவளிக் கும்பல்! இந்த வில்லையை மாட்டிக்கிட்டு உள்ளே போங்க! அடையாளம் கண்டுக்க இந்த ஏற்பாடு!"

---

## ஐம்பதாம் அத்தியாயம்

# தலைவன் தாள்

அன்று மாலை ஆயனரிடம் சிவகாமி தனியாக வந்து, "அப்பா! நான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்று சொன்னீர்கள் அல்லவா? அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள்!" என்றாள்.

ஆயனருக்கு அகம் நிறைந்த மகிழ்ச்சியினால் மூச்சு நின்றுவிடும்போல் இருந்தது. சிவகாமியை உற்று நோக்கி அவளுடைய முக மலர்ச்சியையும் பார்த்துவிட்டு, "அதற்கென்ன குழந்தாய், கூடிய விரைவில் உனக்குத் தக்க நாயகனைத் தீர்மானித்து மணம் செய்து வைக்கிறேன்!" என்றார்.

"அப்பா! எனக்கு நாயகனைத் தேர்ந்தெடுக்கும் சிரமத்தைத் தங்களுக்கு நான் வைக்கவில்லை. ஏகாம்பரநாதரையே என் பதியாக வரித்துக்கொண்டேன்!" என்றாள் சிவகாமி.

தம் அருமை மகளுக்குச் சித்தப் பிரமை முற்றிவிட்டதோ என்று ஆயனர் ஐயமடைந்தார். இன்னும் சிறிது பேசி அவள் தெளிந்த அறிவுடன் இருக்கிறாள் என்பதைக் கண்டார். இது சித்தப் பிரமை அல்ல, பக்தியின் முதிர்ச்சிதான் என்று நிச்சயமடைந்தார்.

அச்சமயம் திருநாவுக்கரசர் பெருமான் அருகில் உள்ள ஒரு சிவஸ்தலத்திலேதான் இருக்கிறார் என்று அறிந்து அவரிடம் சென்று ஆயனர் யோசனை கேட்டார்.

வாகீசர் எல்லாவற்றையும் கேட்ட பின்னர், "ஆயனரே! உம் குமாரியின் விஷயத்தில் என் மனத்தில் தோன்றி



யது உண்மையாய்ப் போய் விட்டது. மானிடப் பெண் யாரும் அடைந்திருக்க முடியாத துன்பங்களை அவள் அடைந்து விட்டாள். இனி அவளுக்கு அத்தனை துன்பங்களுக்கும் இணையான பேரின்பம் காத்திருக்கிறது. உம்முடைய குமாரிக்குச் சிவகாமி என்று பெயரிட்டீர் அல்லவா? அதற்கேற்ப அவள் சிவபெருமானிடமே காதல் கொண்டு விட்டாள். அவளுடைய விருப்பத்துக்கு இடையூறு செய்யாமல் நிறைவேற்றி வையுங்கள். அதுதான் சிவகாமிக்கு நீர் செய்யக் கூடிய பேருதவி'' என்று அருளினார்.

திங்கள் மூன்று சென்ற பிறகு, வாதாபி வெற்றியின் கோலாகலக் கொண்டாட்டங்கள் எல்லாம் ஒருவாறு முடிந்த பிறகு, ஒரு நல்ல நாளில் ஏகம்பநாதரின் சந்நிதிக்கு ஆயனரும், சிவகாமியும், கமலியும், இன்னும் சிலரும் வந்து சேர்ந்தார்கள்.

கோயில் குருக்கள் சுவாமிக்கு அர்ச்சனையும் தீபாராதனையும் செய்து தட்டிலே பிரசாதம் கொண்டு வந்து கொடுத்தார்.

அந்தத் தட்டில் பழம், புஷ்பம், விபூதி, குங்குமம் ஆகிய பிரசாதங்களுடனே, ஆயனரின் முன்னேற்பாட்டின்படி, திருமணத்துக்குரிய திருமாங்கல்யமும் இருந்தது.

சிவகாமி அந்தத் திருமாங்கல்யத்தையும் புஷ்ப ஹாரத்தையும் பக்தியுடனே பெற்றுத் தன் கழுத்திலே அணிந்து கொண்டாள்.

பின்னர், நடராஜனுகிய இறைவனுடைய சந்நிதியிலே நின்று சிவகாமி நடனமாடத் தொடங்கினாள்.



சிறிது நேரம் ஆனந்த பரவசமாக ஆடினாள். பிற்பாடு,

"முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம்
கேட்டாள்"

என்னும் திருநாவுக்கரசரின் திருப்பதிகத்தைப் பாடிக் கொண்டு அதற்கேற்ப அபிநயம் பிடித்தாள்.



சிவகாமி ஆடத் தொடங்கியதிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாகச் சந்நிதியில் ஜனங்கள் சேரத் தொடங்கினார்கள்.

நடனத்தைப் பார்த்தவர்கள் அனைவரும் மெய்ம்மறந்து பரவசமடைந்து பக்தி வெள்ளத்தில் மிதந்தார்கள்..

அச்சமயம் யாரும் எதிர்பாராத வண்ணமாக, மாமல்ல சக்கரவர்த்தியும் அவ்விடம் வந்து சேர்ந்தார்.

முன்னொரு தடவை இதே பாடலுக்கு அபிநயம் பிடித்துக் கொண்டிருந்த போது சிவகாமி மாமல்லரின் வரவை அறிந்து அவருடைய நினைவாகவே அபிநயம் செய்ததுண்டு.

இப்போது சிவகாமி மாமல்லர் வந்ததைக் கவனிக்கவேயில்லை.

அவளுடைய கண்களையும் கருத்துக்களையும் முழுதும் ஏகம்பநாதரே கவர்ந்து கொண்டார்.

வேறு எதுவும் அவளுடைய கண்களுக்குத் தெரியவில்லை; வேறு யாருக்கும் அவளுடைய உள்ளத்தில் இடம் இருக்கவில்லை.

மாமல்ல சக்கரவர்த்தி மற்ற எல்லாரையும் போல் சற்று நேரம் தாமும் மெய்ம்மறந்து நின்று சிவகாமியின் அற்புத நடன அபிநயத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

அவருடைய விசால நயனங்களிலே கண்ணீர் ததும்பி அருவி போலப்பெருகத் தொடங்கியது.

தாம் பல்லவ சக்கரவர்த்தி என்பதும், பக்கத்தில் உள்ளவர்கள் தம்மைக் கவனிப்பார்கள்என்பதும் அவருக்கு நினைவு வந்தன.

சத்தம் சிறிதும் ஏற்படாத வண்ணம் இறைவனுடைய சந்நிதானத்திலிருந்து மாமல்லர் நழுவிச் சென்றார்.

அவர் ஏகாம்பரர் ஆலயத்தின் பிரதான கோபுர வாசலைத் தாண்டிச் சென்று கொண்டிருந்த போது,

"தலைப்பட்டாள் நங்கை
தலைவன் தாளே!"

என்னும் நாவுக்கரசர் பாடலின் கடைசி வரி சிவகாமியின் உணர்ச்சி நிறைந்த இனிய குரலில் கேட்டுக் கொண்டிருந்தது.

**(முற்றிற்று)**

---

* அட்டைப்படம்: "தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே!"




''செல்வத்தினை இழந்தால் நஷ்டம் ஒன்றும் இல்லை; உடல் நலத்தினை இழந்தால் சிறிய நஷ்டம்தான்; ஆனால் நல்ல குணத்தினை இழந்து விட்டால் வாழ்வில் எல்லாவற்றையுமே இழந்தது போலாகும்'' — என்று படத்தில் அடிக்கடி காட்டுகிறார்கள். அவ்வளவுதான். அதை வலியுறுத்தத் திரைக் கதையில் எதுவும் இல்லை. ஒரு குடும்பத்தில் மூத்தவள் மஞ்சள் முகம்—அதாவது கர்நாடகம் — இரண்டாவது பெண் பவுடர் முகம் — அதாவது புடவையே கட்டாத நாகரிகம்! இவ்விரு பெண்களின் வாழ்க்கைதான் திரைக்கதை. 'ஏ' படமாகச் செய்ய வேண்டும் என்பதற்காகவே, அருவருப்பான காட்சிகளைப் பொருத்தம் இல்லாமல் பிடிவாதமாக இணைத்துப் பழி வாங்கி விட்டார்கள். முத்துராமன்—அவரைப் பொறுத்த வரையில், பொறுப்போடு நடித்திருக்கிறார்.

ஒரு பெண், ஆணை வற்புறுத்தும் காட்சியை விரசமாக எடுத்திருப்பது ஆட்சேபத்துக்குரியது. அசட்டுக் கதை! கொடூரமான கற்பனை!

முத்துராமனுக்கு அடுத்தபடியாக நன்றும் நடித்திருப்பவர்கள், ஜெயா, கே. ஏ. தங்கவேலு. முத்துராமனின் தங்கையாக வந்து துடுக்காகப் பேசி மிடுக்காக நடிக்கும் ஸ்ரீப்ரியா ஒருவருக்கு மட்டும்தான் படம் முழுவதும் நல்ல பாராட்டு கிடைத்திருக்கிறது.

பல படங்களுக்குக் கதை, வசனம், டைரக்ஷன் ஆகிய பொறுப்புக்களை ஏற்று இதுவரையில் நல்ல பெயர் வாங்கியிருக்கும் வி. சி. குகநாதன் இந்தப் படத்தில் இழுக்குத் தேடிக் கொண்டு விட்டார்.

''மஞ்சள் முகமே வருக!'' எல்லாருடைய முகங்களிலும் கரியைப் பூசி விட்டதே!

---

# அந்தரங்கம்

சாவித்திரியின் அருமையான நடிப்புத்தான் ''அந்தரங்க''த்துக்குக் கைகொடுத்து உதவியிருக்கிறது. கணவனே கண்கண்ட தெய்வம் என்று கருதும் ஓர் அபலை ஸ்திரீயின் பாத்திரம். ஒன்றும் இல்லாத அந்தக் காலிப் பாத்திரத்தை நடிகையர் திலகம் தம் நடிப்புத் திறமையால் நிறைவு பெறச் செய்கிறார். கணவனுக்கு அவள் செய்து கொடுத்த ஒரு பாழாய்ப் போன சத்தியம்தான் படத்தைக் கடைசிவரையில் இழுத்தடிக்கும் சரியான அறுவை!

கொடூரக் -கணவன் பாகம் மேஜர் சுந்தரராஜனுக்கு ஏற்றதுதான்! 'டாப்பூட்'டென்று ஒன்றும் இல்லாததற்கெல்லாம் அமர்க்களப் படுத்துவதற்கு அவரை விட்டால் வேறு யார் இருக்கிறார்கள்?

கமலஹாசன் ஹீரோ; அசடும் இல்லாமல் சமர்த்தும் இல்லாமல், ஒரு தவிப்பான பாத்திரம். ஒப்பேற்றி யிருக்கிறார். கலியுக அர்ஜுனனாகப் பல பெண்களுடன் கூத்தடிக்கும் பாத்திரம் அவருக்குப் பழகினதுதானே!

ஹீரோயின் தீபா படத்தில் மட்டும் கொஞ்சம் தேகப் பயிற்சி செய்வதில் பயனில்லை. நிஜமாகவே அதிகக் கவனத்துடன் கடுமையான தேகப் பயிற்சி செய்ய வேண்டும். முதல் படத்திலேயே இவ்வளவு தேககனம் கூடாதே! அத்துடன் அவர் நடிப்பிலும் ரொம்ப அநுபவம் பெறவேண்டும். அந்தரங்கத்தையெல்லாம் வெளியில் காட்டிவிட்டால் மட்டும் போதாது. 'சோ', மனோரமா, தேங்காய் சீனிவாசன், காத்தாடி ராமமூர்த்தி ஆகியவர்கள் வந்து என்னவெல்லாமோ செய்து படம் பார்ப்பவர்களைச் சிரிக்க வைக்க முயன்றிருக்கிறார்கள். அவர்களுக்கு என் ஆழ்ந்த அநுதாபம். 'தொழில்' நடத்தும் பெண்ணாக வரும் குமாரி பத்மினியின் பேச்சும், நடிப்பும் அசிங்கம்!

கிளுகிளுப்பூட்டும் சில வெளிப்புறக் காதல் காட்சிகளை மட்டும் வண்ணப் படமாக்கி யிருக்கிறார்கள். அவற்றைப் பாராட்டலாம். பிரபல டைரக்டர் வி. சீனிவாசன் போல் இந்தப் படத்தை டைரக்ட் செய்து மூக்கறுபட்டிருக்க வேண்டாம்!

பாடல்கள் சுத்த அறுவை!

மீரா ஆர்ட்ஸின் ''அந்தரங்கம்'' எந்தவிதத்திலும் பாராட்ட முடியாத படம் என்பதை — அந்தரங்கமாக அல்ல — பகிரங்கமாகவே ஒப்புக்கொள்ள வேண்டியதுதான்!

—காந்தன்



கண்ணைக் கவரும் எண்ணற்ற ரகங்களிலிருந்து உங்களுக்கு தேவையானதை தேர்ந்தெடுங்கள்

லக்ஷ்மியின்

# ப்ரீதி

## செமி ஃபுல் வாயில் புடவைகள்

உயர்ந்த ரக பருத்தியால் தயாரிக்கப்பட்டவை

லக்ஷ்மியின் ப்ரீதி புடவைகள் உங்களை அழகாக தோற்றமளிக்கச் செய்யும். தேர்ந்தெடுக்க பல ரகங்கள் ஒவ்வொரு விசேஷ சந்தர்ப்பத்திற்கும் மிக ஏற்றவை.



தி
லக்ஷ்மி மில்ஸ்
கம்பெனி லிமிடெட்
கோயம்புத்தூர்

உயர்ந்த துணிகளின் உன்னத சின்னம்

YSK.LMC.PRL.733.T.M.

# இசை விழா





சங்கீத வித்வத் சபையில் தொடக்கவுரையாற்றுகிறார் முதல்வர். அருகே ஸ்ரீ டி. எஸ். ராஜம், ஸ்ரீ ராகவன் ஆகியோர்.

தமிழிசையில் "இசைப் பேரறிஞர் பட்டம்" பெற்ற ஸ்ரீமதி பாலசரஸ்வதியை எம். எஸ். வி. வாழ்த்துகிறார். விழாவைத் தொடங்கி வைத்த அமைச்சர் ராசாராம் விருது வழங்கத் தயாராகிறார்.

இந்திய நுண்கலைக் கழகத்தில் தொடக்கவுரையாற்றுகிறார் திரு மால்கம் ஆதிசேஷய்யா. அருகே இவ்வாண்டு "சங்கீத கலா சிகாமணி" விருது பெற்ற ஸ்ரீமதி எம். எஸ்., ஸ்ரீ சதாசிவம், ஸ்ரீ செம்மங்குடி, ஸ்ரீ வைபெருமாளனார்.



# 45% வரை அதிக பருத்தி விளைச்சலைச் சாத்தியமாக்குகிறது

# ஸைகோஸெல்*

## செடி வளர்ச்சி ரெகுலேன்ட்

ஆராய்ச்சிகளும், நிலத்தில் சோதனைகளும் இதை நிரூபித்துள்ளன!
**ஸைகோஸெல்** 45% வரை பயிர் விளைச்சலை அதிகரித்துள்ளது.
ஏனெனில் **ஸைகோஸெல்** அதிகபட்ச பருத்திக்காய் விளைச்சலுக்கு வழிசெய்வதுடன், தேவையற்ற இலைதழைகளை குறைந்தபட்ச அளவில் வைத்திருக்கிறது. **ஸைகோஸெல்** பிரயோகத்திற்கு உட்பட்ட பருத்திச் செடிகள் கச்சிதமாகவும், வலுவாகவும் அமைவதுடன் கரும்பச்சை இலைகளையும், விரைவில், மேலும்சீரான மொட்டுகளையும் பெறுகின்றன. இவ்வாறு **ஸைகோஸெல்** இடம், நீர் மற்றும் ரசாயன உரத்தை மிச்சப்படுத்துகிறது; செடிகள் அழுத்த நிலைகளை நன்றாகத் தாங்கும் சக்தியைப் பெறுவதுடன், சில நோய்களையும், பூச்சிகளையும் எதிர்க்கும்திறனையும் பெறுகின்றன.
எல்லாவற்றையும் விட மிக முக்கியமானது என்னவென்றால், **ஸைகோஸெல்** பிரயோகத்திற்கு உட்பட்ட செடிகளில் காய்கள் பெரியனவாகவும், சிறந்த தரம் வாய்ந்தவையாகவும், அதிகமான பருத்தியைத் தருபவையாகவும் இருக்கின்றன.
லாபத்தில் நாட்டமுடைய பருத்தி சாகுபடியாளர்கள் அதிக விளைச்சலையும், அதிக லாபங்களையும் பெறுவதற்கு **ஸைகோஸெல்** செடி வளர்ச்சி ரெகுலேன்டை உபயோகிக்க போதுமான காரணம் இது.




CYANAMID

**விவசாயப் பிரிவு, ஸயனமைட் இந்தியா லிமிடெட்,**
த.பெ. எண் 9109 பம்பாய்-25.

CIL-389

கண்ணதாசன்

# சேரமான் காதலி

அத்தியாயம் 6

## இரு சிட்டுக் குருவிகள்

பத்மாவதி அப்போது மயக்கத்தில் கட்டுண்டு கிடந்தாள். கணவன் என்ன சொன்னாலும் செய்வதற்குத் தயாராக இருந்தாள்.

உதவியின் மூலம் நண்பனையும், பதவியின் மூலம் எதிரியையும் ஆண்மையின் மூலம் மனைவியையும் திருப்தி செய்பவன் அவர்களை எப்படி வேண்டுமானாலும் ஆட்டி வைக்க முடியும் என்பதை நன்றாக உணர்ந்தவன் ரவிவர்மன்.

ஆகவே, எப்படியும் பத்மாவதி சேரமானிடம் கையெழுத்து வாங்கி வருவாள் என்று அவன் உறுதியாக நம்பினான்.

''இதோ வந்து விடுகிறேன்'' என்று எழுந்து போன பத்மாவதி ஓலையுடனேயே குளிக்கும் அறைக்குச் சென்றாள்.

முதலில் அந்த ஓலையைப் படித்தாள். அவள் முகம் வியர்த்தது. 'இதை அரசரிடம் எப்படிக் காட்டுவது?' என்ற பயம் பிறந்தது. கொஞ்ச நேரம் யோசித்தபடியே நின்றாள்.

ரவிவர்மன் அவளை அழைக்கும் குரல் கேட்டது. அவசரம் அவசரமாகத் தன்னைத் திருத்திக் கொண்டு வெளியே வந்தாள்.

''ஓலையை அந்த அறையிலேயே படித்திருக்கலாமே !'' என்றான் ரவிவர்மன்.

அவன் கோபம் கொண்டவன்போல் காணப்பட்டான்.

''இல்லை; சேலையைத் திருத்திக்கொண்டேன்'' என்றாள் பத்மாவதி.

''நீ அலங்கரிக்கும் நேரத்துக்குள் அரசர் போய்விடப் போகிறார்'' என்றான் அவன்.

''அரசர் ஸ்ரீரங்கம் போய்ச் சேர்ந்துவிட்டாலும் நானும் பின்னாலேயே போகிறேன்'' என்றாள் பத்மாவதி.

அவள் அவனைச் சாந்தப்படுத்த விரும்பினாள்.

''ம்... புறப்படு!'' என்றான் ரவிவர்மன்.

அவள் தேரில் ஏறி அமர்ந்தாள்.

தேரை இழுத்த குதிரையின் நெஞ்சத்தைவிட, அவள் நெஞ்சம் அதிகமாகப் படபடத்தது.

அரசர் இருக்கையை நோக்கிக் குதிரை சென்று கொண்டிருந்தது.

''தேரை நிறுத்து !'' என்றாள் பத்மாவதி.



தேர் நின்றது.

''அந்தப்புரத்து அந்தரங்க வாசலுக்குப் போ'' என்றாள் தேரோட்டியிடம்.

அவன் தேரைத் திருப்பினான்.

சிறிது தூரம் சென்றதும் மீண்டும், ''தேரை நிறுத்து'' என்றாள் பத்மாவதி.

அவன் தேரை நிறுத்தினான். பிறகு ஏதோ யோசித்தவள் போல, ''பரவாயில்லை; போ!'' என்றாள்.

தேர் நகர்ந்தது.

அந்தப்புரத்தின் அந்தரங்க வாசல் அருகே நின்றது. அங்கு காவல் இருந்த அலிகள் தலை குனிந்து வரவேற்று வழிவிட்டனர்.

பத்மாவதி உள்ளே நுழைந்த போது முற்றிலும் மாறுபட்ட ஆடை அணிந்து காட்சி அளித்தாள், மெல்லிளங் கோதை. அவள் இப்போது பட்டத்து ராணி. அது பத்மாவதிக்குப் பெருமையாகத்தான் இருந்தது.

திடீரென்று பத்மாவதி முன்னறிவிப்பின்றி உள்ளே நுழைந்ததும் கோதை ஆச்சரியம் அடைந்தாள்.

'' என்ன அண்ணி ?'' என்று கேட்டாள்.

'' உன்னிடம் தனியாகக் கொஞ்சம் பேச வேண்டும்'' என்று மெல்லிய குரலில் சொன்னாள் பத்மாவதி.

கோதை கையைத் தட்டினாள். அங்கிருந்த பெண்கள் விலகிச் சென்றார்கள்.

பத்மாவதி ஓர் ஆசனத்தில் அமர்ந்தாள். கோதையின் வலது தோளில் தன் இடது கையை வைத்தபடி பத்மாவதி கேட்டாள்.

''கோதை! ஒரு பெண் தன் கணவனிடம் நடந்து கொள்ள வேண்டிய முறை என்ன?''

கோதை சிரித்தாள்.

'' ஏன் சிரிக்கிறாய்?'' என்று கேட்டாள் பத்மாவதி.

''ஆறு பிள்ளை பெற்றவள் மலடியிடம் வைத்தியம் கேட்ட கதையாக இருக்கிறது. எனக்கு முன்னால் மணம் புரிந்தவள் நீ. உனக்குத் தெரியாததா எனக்குத் தெரிந்துவிடப் போகிறது?'' என்றாள் கோதை.

''இல்லை, கோதை. பந்தபாசங்களைக் காட்டி ராஜாங்க விஷயங்களில் ஒரு பெண் தன் நாயகனுக்காகக் குறுக்கிட முடியுமா ?''

'' நாயகன் அப்படி விரும்பினால், குறுக்கிடுவதிலென்ன தவறு? சேரமான் செங்குட்டுவனின் மனைவி வேண்மாள் சொல்லித்தான் செங்குட்டுவனுக்குப் பட்டத்தைக் கொடுத்துவிட்டு, இளங்கோ அடிகள் துறவு பூண்டதாக நமது சரித்திரம் சொல்கிறதே !''

'' நீ சரித்திரத்தைத் தானே சொல்கிறாய் ?''

''வேறென்ன, நம் வீட்டுக் கதையையா சொல்கிறேன்? அண்ணன் தம்பிகளுக்குள் அதிகாரப் போட்டி என்பது



எனக்குத் தெரிந்தவரையில் நம்முடைய வம்சத்தில் இல்லை.''

— கோதை கள்ளம் கபடம் அறியாதவள். பத்மாவதியும் அப்படித்தான். அங்கே இரண்டு சிட்டுக் குருவிகள் ஒன்றோடொன்று பரிதாபமாகப் பேசிக்கொண்டன.

''ஆமாம். எதற்காக நீ திடீரென்று வந்தாய்? எதற்காகத் திடீரென்று இந்தக் கேள்விகள் எல்லாம் கேட்கிருய்?'' என்ருள் கோதை.

அது சொல்லக்கூடிய விஷயமாக இருந்தால் பத்மாவதி சொல்லியிருப்பாள். அவள் கண்கள் கலங்கின. கோதை அதைக் கவனித்தாள்.

''ஏன் அழுகிருய்?'' என்று குழந்தையைப் போலக் கேட்டாள்.

'' இல்லையே ; ஒன்றும் இல்லையே!'' என்று தடுமாறினுள் பத்மாவதி.

''எனக்குப் புரிகிறது. உன் நாயகர் உனக்கு ஏதோ ஆணையிட்டிருப்பார் போலிருக்கிறது. அது என்னவென்று தெரிந்துகொள்ள நான் விரும்பவில்லை. ஆனுல் எந்தக் கரங்கள் இந்தப் புஷ்பங்களை அணிவித்தனவோ, அந்தக் கரங்களுக்காக; எந்தக் கண்கள் இந்தத் தேகம் முழுவதையும் பார்க்க உரிமை பெற்றிருக்கின்றனவோ, அந்தக் கண்களுக்காக; எந்த உள்ளம் இந்தத் தேவதைக்குக் கோயிலாக இருக்கிறதோ, அந்தக் கோயிலுக்காக நாம் எதைச் செய்வதும் நியாயமே!'' என்ருள் கோதை.

'' ஒரு பெண் தன் நாயகனுக்காகக் குல தர்மம் தவறுவதுகூட நியாயம் ஆகுமா ?'' என்று கேட்டாள் பத்மாவதி.

''நீ எதைக் கேட்கிருய்? கற்பைப் பற்றியா?'' என்று கேட்டாள் கோதை.

''சீச்சீ! அந்த நிலை நம் குடும்பத்தில் யாருக்கும் வராது'' என்ருள் பத்மாவதி.

''அப்படிச் சொல். கற்பிழப்பது ஒன்றைத் தவிர, வேறு எந்தக் காரியத்தையும் கணவனுக்காகச் செய்வது நியாயமே'' என்று முத்திரை வைத்தாள் கோதை.

பத்மாவதி ஒரு பெருமூச்சுவிட்டாள்.

''சகோதரி பத்மாவதி தேவியாருக்குச் சகல நலன்களும் உண்டாவதாக'' என்று கூறிக் கொண்டே உள்ளே நுழைந்தான் மார்த்தாண்டவர்மன்.

அவர்கள் இருவரும் எழுந்து நின்ருர்கள்.

புன்னகையோடு கோதை அவனைப் பார்த்து, ''உங்கள் சகோதரிக்கு, ஒரு பெண் எப்படி வாழ வேண்டும் என்ற கேள்வியை என்னிடம் கேட்க வேண்







## நங்கைநல்லூரில்
## ஸ்ரீ ராகவேந்திர பிருந்தாவனம்

சென்னை மீனம்பாக்கம் அருகிலுள்ள நங்கைநல்லூரில் ஸ்ரீ ராகவேந்திர மிருத்திகா பிருந்தாவனம் பிரதிஷ்டை செய்ய முயற்சி நடைபெற்று வருகிறது. ஆஸ்திகப் பெரு மக்கள் கலந்து கொண்டு அம்முயற்சி வெற்றி பெற நன்கொடை வழங்க வேண்டிய முகவரி: பொருளாளர், மத்வசங்கம், நம்பர் 7, 35வது தெரு, நங்கைநல்லூர், சென்னை 600061.

---

டும் போல் தோன்றியிருக்கிறது: அத னால்தான் இங்கே வந்திருக்கிறார்கள்,'' என்றாள்.

''உன்னிடம் கேட்டது நியாயமே. ஓர் அரசன் எப்படி இருக்க வேண்டும் என்று எனக்கே போதிப்பவள் நீதானே!'' என்றான் மார்த்தாண்டவர்மன்.

''இதோ பாருங்கள், என்னை நேருக்கு நேராகப் புகழ்ந்தால் ஆணவம் வந் தாலும் வந்துவிடும். ஒருவேளை உங் களையே சிறையில் போட்டுவிட்டு ஆட்சி பீடத்தைக் கைப்பற்றிக் கொண்டாலும் கொள்ளுவேன்'' என்றாள் கோதை.

''இப்போதுதான் என்ன, நான் உன் சிறையில்தானே இருக்கிறேன்!'' என்றான் மார்த்தாண்டவர்மன்.

''நான் ஒருத்தி நிற்கிறேன்!'' என்று நினைவுபடுத்தினாள் பத்மாவதி.

''ரவிவர்மர் எப்படி இருக்கிறார்?'' என்று கேட்டான் மார்த்தாண்ட வர்மன்.

''நன்றாக இருக்கிறார்'' என்றாள் பத்மாவதி.

''அவர் நன்றாகத்தான் இருக்கிறார்; காலையில்கூடப் பார்த்தேனே; உன் னிடம் எப்படி இருக்கிறார்?'' என்று கேட்டான் மார்த்தாண்டவர்மன்.

பத்மாவதி தலைகுனிந்தபடி, ''நீ கோதையிடம் எப்படி இருக்கிறாயோ, அப்படியே இருக்கிறார்'' என்றாள்.

''ஐயோ! உங்கள் தம்பியைப் பற்றிச் சொல்லாதீர்கள். அவர் என் னைப் படுத்துகிறபாடு பஞ்சுகூடப் படாது!'' என்று தோளைக் குலுக்கிக் கொண்டு செல்லமாகக் கூறினாள் கோதை.

''அரண்மனை எவ்வளவு பெரிதாக இருந்தாலும், அந்தப்புரம் பாதியாக இருக்கிறதே என்ன செய்ய!'' என் றான் மார்த்தாண்டவர்மன்.

''நாயகனை அந்தப்புரம் இந்தப் புறம் அசையவிடாமல் காப்பாற்றுவது அந்தப்புரம்தானே?'' என்றாள் கோதை.

''ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தி காட்டுக் குச் செல்லும்போது, ஜானகி தேவியும் ஏன் கூடச் சென்றாள்? கணவன் மீது இருந்த காதலால் மட்டுமல்ல; அங்கும் ஒருத்தி பங்குக்கு வந்துவிடக் கூடாதே என்றும்தான்!'' என்றான் மார்த் தாண்டவர்மன்.

''அண்ணி! தெரியுமோ, இவர் ஒரு புதிய ராமாயணம் எழுதிக் கொண் டிருக்கிறார்'' என்றாள் கோதை, பத்மா வதியைப் பார்த்து.

''அந்த ராமாயணத்தில் நானும் வருகிறேனா!'' என்று கேட்டாள், பத்மாவதி.

''வேண்டுமானால் சேர்த்துவிடு வார்'' என்று சொன்ன கோதை, மார்த்தாண்டவர்மன் பக்கம் திரும்பி, ''இதோ பாருங்கள், உறவைக் கொஞ் சம் மாற்றி அண்ணா ரவிவர்மரைப் பரத ராகவும், அண்ணியாரை அவரது தேவி யாகவும் எழுதி விடுங்கள்'' என்றாள்.

''வால்மீகி என்ன சொல்வாரோ!'' என்றான் மார்த்தாண்டவர்மன்.

''நானே வால்மீகி என்று வைத் துக் கொள்ளுங்களேன்!'' என்றாள் கோதை.

''நீ வால்மீகியா? உனக்கு வால் தான் மீதி!'' என்றான் மார்த்தாண்ட வர்மன்.

''அதுவும் ராமாயணத்துக்குத் தேவைதானே!'' என்றாள் பத்மாவதி.

''அண்ணி, அண்ணி! நாத்தனார் புத்தியைக் காட்டுகிறாயே!'' என்று செல்லமாகச் சிரித்தாள் மெல்லிளங் கோதை.

''நல்லது. ராமாயண ஆராய்ச்சி நீடித்துக் கொண்டே போனால், என் தம்பியும் மார்த்தாண்ட ஆழ்வார் ஆனாலும் ஆகி விடுவான்! அப்பா அப் படித்தானே ஆனார். அதனால் இதை இதோடு நிறுத்திக் கொள்வோம்!'' என்றாள் பத்மாவதி.

நாயகன் — நாயகியின் நெருக்க மான பாவத்தைக் கண்ட பத்மாவதி தான் வந்த காரியத்தையே மறந்துவிட் டாள். அந்தக் காரியத்தை மார்த் தாண்டவர்மனிடம் சொல்லவும் அவள் விரும்பவில்லை.

''சரி. நான் வருகிறேன்'' என்றாள்.

(தொடரும்)

# அகத்தில் இளமை இருக்கையிலே...

## ..முகத்திலே அது மலரட்டுமே.

மலரட்டுமே மாந்தளிர் மேனியிலே மாசில்லா இளமையழகு
மலரட்டுமே பாண்ட்ஸ் கோல்டு க்ரீம் துணையோடு.
உங்கள் மேனியழகுக்குத் தேவைப்படும் குழைவான
இயற்கைத் தைலங்கள் யாவும் இணைந்த கலவை இதுவே.
உள்ளிறங்கத் தேய்த்து சருமத்திற்கு ஊட்டமளியுங்கள்.
குளிர் வாடைக் காற்றின் கொடுமையிலிருந்து
காத்திடுங்கள் உங்கள் மேனியை.




## இளமை திகழும் மேனி என்றும் உமக்கே.

# பாண்ட்ஸ் கோல்டு க்ரீம்

சீஸ்பரோ பாண்ட்ஸ் இன்க் (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் அமெரிக்காவில் இணைக்கப்பட்டது).

லின்டாஸ்-CPCA-140TH

''வெந்நீர் தயாராக இருக்கிறது, புவனா!'' என்று சமையலறையிலிருந்து கூவினாள் என் அக்கா கல்யாணி.

பக்கத்து அறையில் ஏதோ புஸ்தகத்தைப் படிப்பது போல் பாவனை செய்து கொண்டிருந்த நான் சட்டென்று எழுந்தேன். அன்று ஞாயிற்றுக்கிழமை. என் கல்லூரிக்கு விடுமுறை. ஆனால் எனக்கு மட்டும் ''ஸ்பெஷல் கிளாஸ்'' உண்டு. அப்படித்தான் அக்காவிடம் சொல்லியிருந்தேன்.

நான் குளியல் அறைக்குள் நுழைவதற்கு முன்னால் – தயாராகத் தோய்த்து மடித்து வைக்கப்பட்டிருந்த உடைகளை எடுத்து நீட்டினாள் அக்கா.

''இதெல்லாம் நீ ஏன் செய்கிறாய் அக்கா! நான் எடுத்து வைத்துக் கொள்ளமாட்டேனா?.... என்னை நீ இன்னும் குழந்தையாகவே நினைத்துக் கொண்டிருக்கிறாய்...'' என்று சிணுங்கினேன் நான்.

''போடி! உனக்குக் குழந்தை பிறக்கும் வரையில் எனக்கு நீ குழந்தைதான்'' எனச் செல்லமாக என் முதுகில் தட்டினாள் என் அக்கா கல்யாணி.

குளித்துவிட்டு வெளியே வந்த நான், என் கூந்தலை இரட்டைப் பின்னலிட்டுக் கொண்டேன். பவுடர் பூசித் திலகமும் வைத்துக் கொண்டேன்.

''ஏன் அக்கா...! உனக்கு ஏதும்...''

''எனக்கு என்னவோ பசியே இல்லை, அம்மா!'' என்றாள் அக்கா.

எனக்கு இது அப்பட்டமான பொய் என்று தெரியும். முதல் நாள் சனிக்கிழமை, அக்கா ஒரு பொழுது மட்டுமே சாப்பிடுவாள். அப்படி இருக்கும்போது எப்படிப் பசிக்காமல் இருக்கும்? நான் நிமிர்ந்து பார்த்தபோது அக்கா அங்கு இல்லை. பக்கத்து அறைக்குப் போய் விட்டாள்.

நான் மௌனமாகச் சாப்பிட்டு முடித்தேன். அக்காவின் குரல் அங்கிருந்து கேட்டது. ''நீ கேட்டாயே ஐந்து ரூபாய்....உன் கைப் பையில் வைத்திருக்கிறேன். ஞாபகமாகப் புரொபஸரிடம் கொடுத்து விடு!'' என்றாள்.

எனக்குத் தொண்டையை அடைத்துக் கொண்டு வந்தது. எத்தனை வெகுளி இவள்? இவளைப் போய்






– அன்னம் –

'' டிபன் தயாராக இருக்கிறது.... வந்து சாப்பிட்டுவிட்டுப் போ!'' என்று ஞாபகப் படுத்தினாள் அக்கா.

நான் சமையல் அறைக்குள் நுழைந்தேன். நான் குளித்துவிட்டு வருவதற்குள் எதிரில் உள்ள ஹோட்டலுக்குப் போய் அக்கா டிபன் வாங்கி வந்திருக்கிறாள். சிற்றுண்டி எனக்கு மட்டுமே போதுமானதாக இருந்தது.

ஏமாற்றுகிறோமே என்று தோன்றியது. அந்தப் பணம் என் சொந்தத் தேவைக்குத்தான். புரொபஸர் ஏதோ செமினார் ஏற்பாடு பண்ணியிருக்கிறார் — 

அன்று வேகமாக வீட்டுக்கு வந்த அக்கா, எனக்குக் காப்பி கலந்து ஆற்றினாள். அவள்

கைகளில் வளையல்கள் இல்லாமல் இருந்ததை அப்போதுதான் நான் கவனித்தேன்.

''அக்கா!... உன் வளையல்கள் எங்கே ?'' என்று கேட்டேன்.

''பத்திரமாக இரும்புப் பெட்டியில் இருக்கிறது !'' என்றாள் அக்கா சிரித்தபடி.

''இரும்புப் பெட்டியிலா?'' என்று கேட்டேன் நான் வியப்புடன். சாயம் போன




தகரப் பெட்டியைத் தவிர வேறு பெட்டி எங்கள் வீட்டில் கிடையாது.

''நம் வீட்டில் இரும்புப் பெட்டி இல்லாவிட்டால் என்ன? சேட் வட்டிக் கடையில் இருக்கிறதே !'' என்றாள் அக்கா கொஞ்சமும் முகத்தில் சலனம் இல்லாமல்.

''என்ன, அக்கா சொல்கிறாய்நீ?'' என்றேன் ஆற்றாமையுடன்.

அக்கா என்னை அடக்கினாள். '' உனக்கு இதெல்லாம் எதற்கு? நீ நன்றாகக் கவனமாகப் படித்துச் சம்பாதித்து, என்னை உட்கார வைத்துச் சோறு போடு... குடும்பம் என்றால் மேடும் இருக்கும்; பள்ளமும் இருக்கும்.''

நான் அக்காவை ஏறிட்டுப் பார்த்தேன். ஒரு செகண்டரி பள்ளியில் அக்கா ஆசிரியையாக வேலை பார்க்கிறாள். எனக்கு மூன்று வயதாகும்போது என் தாயார் அவளிடம் என்னை ஒப்படைத்துவிட்டு மறைந்து போனாள். நான் இன்று இருபது வயதை எட்டிப் பிடித்துக் கொண்டிருக்கிறேன். அக்கா முப்பதை எப்போதோ தாண்டி விட்டாள்.

வாழ்க்கையில் என்ன சுகத்தைக் கண்டாள்? தன்னைப் பற்றியே நினைக்காமல் எனக்காக உழைக்கும் அவளுக்குத்தான் என்னிடம் எத்தனை நம்பிக்கை ? நான் அதற்குத் தகுந்தவன் தானா ?

இந்த நான்கு மாதங்களாகவே நான் அக்காவிடம் பொய்தான் சொல்லி வந்திருக்கிறேன். எந்த ஞாயிற்றுக்கிழமையும் எனக்கு ஸ்பெஷல் கிளாஸ் இருந்தது கிடையாது. அவர்—என் முரளி — சொல்லிக் கொடுத்த நாடகம் அது. நேராக மௌண்ட்ரோட் போய் இறங்குவேன். முரளி அங்கே எனக்காகக் காத்துக் கொண்டிருப்பார். இருவருமாக ஒரு திரைப்படம் பார்ப்போம். பின்னர் ஒரு ஹோட்டலில் இஷ்டப்படி சாப்பிடுவோம். பகல் இரண்டு மணிக்குப் படித்து அலுத்தவன் மாதிரி நான் வீடு திரும்புவேன். இப்படியே பல ஞாயிற்றுக்கிழமைகள் ஓடிவிட்டன.

இத்தனை நாட்களாக நான் அக்காவை ஏமாற்றி வந்தது எனக்குத் தவறாகப்படவில்லை. நான் செய்து வந்த காரியங்களின் எதிர்கால விளைவுகளை எண்ணாமல், உதட்டளவில் பொய்களை வெகு சுலபமாக அடுக்கி வந்தேன். இன்று அவள் காலை ஆகாரம் சாப்பிடவில்லை. நான் வயிறு முட்டச் சாப்பிட்டிருக்கிறேன். குடும்பச் செலவுக்காக அக்கா தன் கை வளையலை அடகு வைத்திருக்கிறாள். நான் உல்லாசமாக இருக்க அவளிடம் பணம் வாங்கியிருக்கிறேன். எத்தனை பெரிய துரோகம் இது ?

போன வாரம் முரளி என்னிடம் சொன்னார். இப்படிச் சந்தித்துச் சந்தித்துப் பிரிவது அவருக்கு ரொம்பவும் ஏமாற்றமாக இருக்கிறதாம். ஒரு ஞாயிற்றுக்கிழமை இருவரும் சில நண்பர்களுடன் கூடப் போய்த் திருநீர்மலையில் திருமணம் செய்து கொள்ளலாம் என்றார். '' உன் அக்கா என்ன, என் அம்மா என்ன — யார் எது வேண்டுமானாலும் சொல்லட்டும்.....! என் சம்பாத்தியத்தில் நாம்

குடும்பம் நடத்தலாம்!'' எனக்கும் 'அது சரியாகப் பட்டது. இன்று அவருக்கு நான் முடிவான பதில் சொல்ல வேண்டும். சரி என்ற பதிலைத்தான் நேற்று இரவு வரையில் நிச்சயம் செய்திருந்தேன். ஆனால் இன்று ?

மனம் எங்கெல்லாமோ அலை பாய நான் பஸ்ஸில் ஏறினேன். யந்திரம் போல் முரளி சொல்லியிருந்த தியேட்டர் வாசலில் இறங்கினேன். ஓர் ஓரமாக நின்றபடி சிகரெட் ஒன்றைப் புகைத்துக் கொண்டிருந்த முரளி என்னைப் பார்த்ததும் ஓடி வந்தார்.

'' என்ன ? இத்தனை நேரம் ? நீ வரவே மாட்டாயோ என்று பயந்தே போனேன் !'' என்று தம் ஏமாற்றத்தை வெளிக் காட்டினார்.

''நீங்கள் பயந்தது தப்பில்லை. இன்று நான் உங்களுடன் சினிமாவுக்கு வரப் போவதில்லை !'' என்றேன்.

'' ஏன்? வேறு ஏதாவது அவசர வேலை இருக்கிறதா ?'' என்று கேட்டார் அவர்.

''இல்லை.... இப்படி நாம் இரண்டு பேரும் திருட்டுத்தனமாகச் சந்திக்கிறது எனக்குத் துளியும் பிடிக்கவில்லை!''

'' எனக்கு மட்டும் இது பிடித்திருக்கிறதா? எனக்குப் பிடித்தமானவற்றை இலை போட்டுப் பரிமாறிக் கைகளையும் வாயையும் கட்டிப் போட்டாற்போல் இருக்கிறது. அதனால் தான் அடுத்த வாரம் திருநீர்மலையில் நம் கல்யாணம்.....'' என்று அடுக்கிக்கொண்டே போனார்.

நான் இடைமறித்தேன். ''என்னால் அது முடியாது. முரளி... நான் அதற்கெல்லாம் கொடுத்து வைத்திருக்கவில்லை. என் அக்காவை விட்டு நான் உங்களுடன் வந்தால் என்னால்கூட என்னை மன்னிக்க முடியாது.... ஒருநாளும் என் வாழ்க்கையில் நிம்மதி கிடைக்காது....'' என்று மனம் வருந்திச் சொன்னேன்.

''பெரிய அக்கா!..... உம்... என் தாயைக் கூட நான் இலட்சியம் செய்யவில்லை. என் சொந்த அம்மான் மகள் லட்ச ரூபாய் ஆஸ்தியுடன் எனக்காகக் காத்துக் கொண்டிருப்பது உனக்குத் தெரியும். நான் எதையும் உன்னிடமிருந்து மறைக்கவில்லை. எல்லாவற்றையும் துச்சமாக மதித்துவிட்டு உன் பின்னால் சுற்றினேன் பார். அதற்கு இந்தப் பதிலும் வேண்டும் ! இன்னமும் வேண்டும்!''

உண்மைதான்; அவர் எதையும் மறைக்கவில்லை. அவர் அம்மான் மகள் காத்துக் கொண்டுதானிருந்தாள். என்னைவிடக் கொஞ்சம் நிறம் மட்டு. படிப்பு அத்தனை போதாது. அவர் அம்மா தன் அண்ணன் மகள்தான் தன் மருமகள் எனத் திடமாக நம்பியிருந்தார். எங்கள் விவகாரம் அவருக்குத் தெரியாது

இருந்தாலும் நான் என் நிதானத்தை இழந்து விடவில்லை.

'' நீங்கள் கோபப்படுவது நியாயம்தான் முரளி..... உங்கள் நம்பிக்கையை வளர்த்து விட்டது நான். என்னை மன்னிக்க உங்களால் முடியாது. அதற்கு நான் துணிவும் தகுதி இல்லைதான்.... நான் செய்தது தவறு என்று எனக்குப் படுகிறது. தொடர்ந்து செய்யத் துணிவும் இல்லை... நாம் பிரிவதுதான் சரி என்று படுகிறது... என்றேன்.

முரளியின் குரலில் இருந்த ஆவேசம் அடங்கி விட்டது. ''அப்படியானால்... உம்... சரி !'' என்றவர் சட்டென்று வந்த வழியே என்னைத் திருப்பிக் கூடப் பார்க்காமல் வெகு வேகமாக நடக்கலானார்.

எனக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. கண்கள் நீரைச் சொரிந்தன. வேகமாக நடந்து வீட்டை அடைந்தேன்.

**வீ**ட்டின் வெளிக் கதவு மூடியிருந்தது. கதவைத் தட்டக் கையைக் கொண்டு போனேன். கைபட்டதும் கதவு தானாகத் திறந்து கொண்டது.

நடையில் புதிதாக ஒரு ஜோடிச் செருப்பு கிடந்தது. 'யார் வந்திருப்பார்கள்?' உள்ளே பேச்சுக் குரல் கேட்டது. அவர் — சுந்தரம் தான் — வந்திருந்தார். என் அக்கா வேலை பார்க்கும் பள்ளிக்கூடத்தில் ஆசிரியராக இருக்கிறார். தாரம் இழந்தவர். ஐந்து வருஷங்களாகத் தனியாகத்தான் இருக்கிறார்.

என்னைப் பற்றிய பேச்சு என அறிந்ததும் நான் அப்படியே நின்றேன்.

''நான் என்ன செய்ய முடியும் ? சொல்லுங்கள்....! அந்தப் பையனைவிட நல்ல இடமாகப் பார்த்து நான் அவளுக்குக் கல்யாணம் செய்து வைக்க முடியுமா? நீங்கள் சொன்னதிலிருந்து பையன் நல்லவன் எனத் தெரிகிறது..... நடக்கட்டுமே!'' என்றாள்.

எனக்குப் பேரதிர்ச்சியாக இருந்தது. அக்காவா இப்படிப் பேசுகிறாள்? சுந்தரமும் மௌனமாக இருந்தார்.

''என்ன பேசாமல் இருக்கிறீர்கள்? புவனாவின் பின்னால் நானே போய் அந்தப் பையனை அவன் அறியாமல் பார்த்தேன். குறை ஒன்றும் தெரியவில்லை. இப்போது ஞாயிற்றுக்கிழமை அவனைப் பார்க்கிறாள். நான் கண்டித்தால் தினமும் கல்லூரிக்குப் போகாமல் அவன் பின்னால் சுற்றுவாள் !''

அக்கா இவ்வளவு கேவலமாகவா மதித்து விட்டாள்...? இல்லை... என் நடத்தைதான் அத்தனை மோசமாக இருந்திருக்கிறது.

''நாளைக்கே அவன் மாலையும் கழுத்துமாக வந்து நிற்கிறான். என்ன செய்வாய் ?'' என்று கேட்கிறார் சுந்தரம்.

''... என்ன செய்வது? கைக் குழந்தை போல் என் காலைச் சுற்றி வந்து கொண்டிருந்த புவனா, அவள் புருஷன் பின்னால் சென்று விடுவாள்.''

எனக்குப் புரியவில்லை. சுந்தரமே புரிய வைத்தார்.

'' நான் உன்னைக் கேட்டபோது எல்லாம் 'புவனா புவனா', என்று சொல்லிக்கொண்டு வந்தாய்.... அவள் தனக்கு ஒரு பாதையைத் தேடிக் கொண்டு விட்டாள். அப்புறம் நமக்கு என்ன தடை ?'' என்று கேட்டார் சுந்தரம்.

''அத்தனை பாக்கியம் நான் செய்திருக்கிறேனா என்னவோ ?'' என்று வருத்தப்பட்டாள் அக்கா.

நான் எனக்குள் நிச்சயம் செய்து கொண்டேன். ''அக்கா ! நீ வாழ வேண்டும். வாழத்தான் போகிறாய். 'ஓடிப்போனவள்' என்று எனக்குப் பட்டம் வந்தாலும் சரி.... நீ நன்றாக இருக்க வேண்டும். அதுதான்



'' எதிராளியை நேசியுங்கள் : உங்கள் தவறுகளை அவர்கள்தான் நன்றாகச் சொல்வார்கள் !''

பிராங்க்ளின் — '' எஸ். ஜி ''

என் ஆசை!'' எனச் சபதம் செய்து கொண்டேன். வந்த சுவடு தெரியாமல் திரும்பி நடந்தேன்.

எனக்கு முரளியின் வீடு தெரியும். நிச்சயம் அவர் வீட்டில்தான் இருப்பார். நிச்சயம் சினிமாவுக்குப் போயிருக்க மாட்டார்.

பஸ் உடனே கிடைத்தது. நல்ல சகுனம் தான். முரளி வாசல் வராந்தாவில்தான் இருந்தார். என்னைப் பார்த்ததும் ஒரே ஆச்சரியம்....

''வா, புவனு, வா !'' என அழைத்தார். எப்படி ஆரம்பிப்பது என்று புரியவில்லை.

''உன் மேல் எனக்குக் கோபம், புவனு !'' என்றார் முரளி.

'' இருந்தது நியாயம்தான்!'' என ஒப்புக் கொண்டேன்.

''ஆனால் வீடு திரும்பிய பிறகு யோசித்தேன். நீ சொன்னதில் என்ன தப்பு? நாம் வளர்த்த தென்னைகூட நமக்கு — வைத்துத் தண்ணீர்விட்ட நமக்கு — எத்தனை உபயோகமாக இருக்கிறது? உன் அக்கா உனக்கு எப்படியோ அப்படித்தான் என் தாய். நானே வலியப் போய் என் மாமன் மகளை மணக்கச் சம்மதம் தெரிவித்தேன். என்னைத் திருத்தியதும் நீதான் என்றேன்.... அம்மா டெலிபோனில் மாமாவிடம் சொல்ல மாமா இன்றைக்கே — பகல் மூன்று மணிக்கு நிச்சய தார்த்தத்துக்கு ஏற்பாடு செய்துவிட்டார்.''

அவர் சொல்லிக் கொண்டே போனார். நான் கேட்டுக் கொண்டே இருந்தேன். என் விம்மலை அவர் கேட்காமல் இருக்க உதட்டைக் கடித்துக் கொண்டேன்.

''ஆமாம்.... நான் பேசிக் கொண்டே இருக்கிறேன். இவ்வளவு அவசரமாக நீ எங்கே இங்கு வந்தாய் ? என்ன விஷயம் ?'' என்று கேட்டார்.

''ஒன்றும் இல்லை'' என்றேன்.

வேறு என்ன சொல்ல ? என் வாழ்க்கையில் எனக்கு என்ன இருக்கிறது? என் வாழ்க்கையின் முதல் அத்தியாயத்தில் நானே ஒரு முற்றுப்புள்ளியாய் நின்றுவிட்டேனே !

## எழுத்துச் சிரிப்பு




எவ்வளவு நேரமா நானே குழந்தையைச் சுமந்துகிட்டு இருப்பேன்? நீங்க கொஞ்சம் வச்சுக்குங்களேன்.




ம்... ஒருத்தன் 'ஹிப்பி' மாதிரி முடி வளர்த்திருக்கான்! இன்னொருத்தனுக்கு ''கர்லிங்'' (சுருட்டை.) கிராப்பு.... எனக்கு இவ்வளவு சீக்கிரத்திலே வழுக்கை விழணுமா ?




கணவன், மனைவின்னு தெரியுது... அதுக்காக இப்படியா வெட்கமில்லாமல் தெருவிலே இடிக்கக் கிட்டு நடக்க வேண்டும்...




ஏன் ? உங்களுக்கு 'பாடிகார்டு' இல்லையா....?




ஏங்க ! உங்களைப் பார்க்கவே முடியலையே..... பார்க்கிறது அபூர்வமாயிருக்கு..... ஃபாரின் போய் இருந்தீங்களா.....?




டீ !... அமங்கலமா நிற்காதே..... உள்ளே போய்ப் 'பொட்டு' வைத்துக் கொண்டு வா.....



விளையாடி காலை ஒடிச்சிக்கிட்டு வந்துட்டியா ?

பி.யூ. நாராயணன்

# பொன்னியின் புதல்வர்



சுந்தா

## 14. பரிகாசக் கலை

**சினத்தை ஆற்றிடச் சிரிப்பு
மனத்தை மாற்றவும் சிரிப்பு**

அபூர்வமாய்க் கல்கி ஒரு சிலேடை அடித்தது பற்றி, துக்கடாக் கதை ஒன்று வெகுவாகப் பரவியிருக்கிறது. வாழ்க்கையில் தம்பதியரும், வெள்ளித் திரையில் நகைச்சுவை நடிக ஜோடியுமான, என். எஸ். கிருஷ்ணன், டி.ஏ. (T.A.) மதுரம் ஆகியோர் சம்பந்தப்பட்டது அது. அவர்கள் நடித்த படம் ஒன்றைப் பற்றித் தமது பாராட்டை நேரில் தெரிவிப்பதற்காக, ஒரு நாள் மாலை அவர்களுடைய வீட்டுக்குச் சென்றார் கல்கி. இருவரும் அவரை உபசாரமாய் வரவேற்று அமரச் செய்தார்கள்.

''என்ன சாப்பிடுகிறீர்கள் ....? காப்பியா, டீயா?'' என்று கேட்டார் என். எஸ். கிருஷ்ணன்.

''டீயே மதுரம் !'' என்றார் கல்கி.

இந்தத் துக்கடாக் கதை உண்மையோ என்னமோ தெரியாது. ஆனால் அப்படி எல்லாம் சிலேடை அடித்துப் பேசும் அளவுக்கு, அந்த நகைச்சுவைத் தம்பதியருடன் அவர் அளவளாவியது உண்டு என்பது உண்மையே.

வெள்ளித் திரையில் தோன்றியதுடன், வேறு வெளி அரங்குகளிலும் என். எஸ். கிருஷ்ணன் நேரில் தோன்றி, சில நிகழ்ச்சிகளை நடத்திக் கொண்டிருந்தார். அவற்றில் ஒன்றைப் பற்றிக் கல்கி ''சாதி உணர்ச்சிகளைப் போக்கிக் கல்வியின் பெருமையை நிலைநாட்டும் 'கிந்தனார் காலட்சேபம்' எத்தனை தடவை கேட்டாலும் அலுப்பதில்லை; அவ்வளவு கற்பனையும் ரஸனையும் அதில் பொருந்தி யிருக்கின்றன'' என்று எழுதினார்.

நந்தனாரைக் கிந்தனாராய் மாற்றியதிலிருந்தே அது ஒரு நையாண்டி அல்லது பகடிக் காலட்சேபம் என்பதை ஊகித்துக் கொள்ளலாம். நந்தனார் சரித்திரக் கீர்த்தனைகள் சில, அந்தந்த வடிவிலேயே அதில் அமைந்திருக்கும்; சில சொற்கள் மட்டும் அங்கங்கே மாற்றியோ திருகியோ இருக்கும். உதாரணமாய், ''உயரஞ் சிகரக் கும்பம் தெரியுதாம்'' என்பது, ''உயரஞ் சிகரக் கலயம் தெரியுமாம்'' என்றிருக்கும் — அதாவது தென்னை மரத்தில் கட்டிய கலயம்.

கிந்தனார் தோன்றியதற்குப் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னால், ''கட்டை வண்டி'' என்ற பகடி நாடகம் ஒன்று தமிழர்களைக் குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைத்துக் கொண்டிருந்தது— சாதாரணமாய்ச் சிரிக்காத ''ஸீரியஸ்'' கனவான்களைக்கூட. அதை இயற்றியவர், அப்போது சென்னை ராஜதானிக் கல்லூரியில் ஆங்கிலப் பேராசிரியராய் இருந்த கே. சுவாமிநாதன்.

அக்காலத்தில் இசைத்தட்டுக்கள் மூலமும் சம்பிரதாய நாடகங்கள் மூலமும் பிரபலமாகி இருந்த பாட்டுக்கள் பலவற்றைத் தமது ''கட்டை வண்டி'' யில் ஏற்றிக் கேலிப் போலிப்பு (parody) செய்திருந்தார் அவர். உதாரணமாய், எஸ். ஜி. கிட்டப்பாவின், ''காமி சத்ய பாமா கதவைத் திறவாய்'' என்பதை, ''பாட்டி கிழப் பாட்டி வாயைத் திறவாய்'' என்று மாற்றி இருந்தார். அதே போலப் ''பண்டித மோதிலால் நேருவைப் பறிகொடுத்தோமே - மனம் - பரிதவித்தோமே'' என்பதைக் ''காதல் கமலாஸினியைப் பறிகொடுத்தோமே— மனம் — பரிதவித்தோமே'' என்று கேலியாய்ப் போலிப்பு செய்திருந்தார்.

அது ஒரு ''ஸடைர்'' நாடகம். அதைக் கல்கி விமரிசனம் செய்கையில், ''ஸடைர்'' என்பதற்குச் சரியான தமிழ்ச் சொல் ஒன்றைக் கொடுக்காமலே, அது என்ன என்று விளங்கும்படி செய்திருந்தார் :

...இரண்டு பெரிய நோக்கங்கள் இதில் நிறைவேறி யிருக்கின்றன. முதலாவது, தற்சமயம் நமது சமூக வாழ்க்கையிலும், அரசியல் வாழ்க்கையிலும் உள்ள வேடிக்கைகளையும், ஆபாசங்களையும் ஐம்பது வருஷத்துக்குப் பின்னால் தோன்றக்கூடிய ஓர் அறிஞரின் கண்களைக் கொண்டு பார்ப்பது போல் நாம் இந்நாடகத்தில் பார்த்து நகைக்கிறோம். நமது பொது வாழ்க்கையில் உள்ள நகைக்கத்தக்க அம்சங்கள் எல்லாம் ஏக காலத்தில் நம் கண் முன்னே வருகின்றன. இரண்டாவது, நமது

தமிழ் நாடக மேடையில் உள்ள குறைபாடு களும் அசந்தர்ப்பங்களும் ஓரளவு மறைமுக மாக நம் முன் தோன்றி நகைப்புக்கு இலக் காகின்றன. அநேக விஷயங்களில் சீர் திருத்தம் செய்வதற்கு, கோப தாபங்களை விடச் சிரிப்பு அதிக பலன் உள்ளதாகும் அல்லவா?

அந்தக் ''கட்டை வண்டி'' நாடகத் தைப் பற்றி இரண்டு பாராட்டு விமரிச னங்களைக் கல்கி எழுதி அடுத்தடுத்து ஆனந்த விகடனில் வெளியிட்டார். ஒரே நாடகத்துக்கு இரண்டு விமரிச னங்கள் எழுதக் காரணம் அல்லது அவசி யம் என்ன? இதற்கு விடை, மகாத்மா காந்தியின் நல்லுரைகளை எல்லாம் தொகுத்து வெளியிடும் நிறுவனத்தில் தலைவராய் இப்போது பணியாற்றும் பேராசிரியர் சுவாமிநாதனிடமிருந்து கிடைத்தது. தமது நாடகம் அரங் கேறுவதற்கு முன்னால் அதை அவர் கல்கிக்கும் டி. கே. சி.க்கும் படித்துக் காட்டியபோது அவர்கள் அதை அவ் வளவாக ரசிக்கவில்லையாம்; பின்னர் அதை நாடகமாய் அரங்கில் பார்த்த போதுதான் வெகுவாக ரசித்தார்க ளாம். படித்துக் கேட்கையிலேயே அதைச் சரியாய் மதிப்பிடத் தவறிய தற்குப் பரிகாரமாய்த்தான், ஒரு தரத் துக்கு இருதரமாய்த் தமது பாராட் டைக் கல்கி வெளியிட்டார் போலும். முன்பே அதை மதிக்கத் தவறியதை, தமது முதல் விமரிசனத்தில் ஜாடை யாகக் குறிப்பிட்டும் இருந்தார்.

கட்டை வண்டி என்ற பகடி நாடகம் எழுதிய கே. சுவாமிநாதன். மாலி சித்திரம் - நன்றி - ஆ.வி.

திரு எம். எஸ். மணிக்கு 'விடாக்கண்டன்' என்ற தமது புனை பெயரைக்கூட விட்டுக் கொடுத்தார் கல்கி.

விகடம் கிருஷ்ணமூர்த்திக்கு மாலை அணிவித்து வாழ்த்துகிறார் கல்கி.

கல்கியையே பரிகசித்து அவரிடமே பாராட்டுப் பெற்ற நாடோடி.

பகடி செய்வதில் ஓர் அபாயம் உண்டு. மூலப்பாட்டை இழிவு செய்து விட்டதாகச் சிலர் வருத்தப்படக்கூடும்; கோபித்துக் கொள்ளவும் கூடும். அது வும் மூலப்பாட்டு ''புனிதமானதாய்'' இருந்துவிட்டால், வருத்தமும் கோப மும் மேலோங்கிக் கண்டனமாய் முற்றி விடும். என். எஸ். கிருஷ்ணனின் கிந்த னூர் பாடல்கள் அப்படித்தான் ஒரு சாராரின் கண்டனத்துக்கு இலக்காயின.

இவ்விதக் கண்டனத்தை எண் ணியே, கேலிப் பாட்டுக்கள் புனைந்து வெளியிடுவதை, வெகு காலமாய்க் கல்கி தவிர்த்து வந்தார் எனத் தோன்று கிறது. ஆயினும், தவிர்க்க வேண்டாத ஒரு சமயம் வந்தபோது, ''இடுக்கண் வருங்கால் நகுக'' என்ற வாக்கின்படி நடக்க ஒரு தருணம் வாய்த்தபோது, அந்த நகைச்சுவைப் பாணியை ஒரு கை பார்த்தார்.

1948ம் ஆண்டின் தொடக்கத்தில், உணவுப் பற்றாக்குறை என்ற கவலை யும் கஷ்டமும் தமிழ் நாட்டைப் பற்றிக் கொண்டன. அவற் றைத் தீர்ப்பதற்காக, யார் யாரோ என் னென்னமோ யோசனை களைத் தெரிவித் தார்கள்; வாக்குறு திகள் அளித்தார்கள்;










முயற்சிகள் செய்தார்கள். எதுவும் வகையாய் இல்லை. அந்நிலையில் மனத்தில் எழுந்த ஆத்திரத்தையும் விரக்தியையும் சில பகடிப் பாடல்களில் கல்கி கொட்டித் தீர்த்தார். அவற்றைப் ''பஞ்சப் பாட்டும் கொஞ்சம் கூத்தும்'' என்ற தலைப்புடன், ''விவசாயி'' என்ற புனைபெயரில், பிப்ரவரி 29ம் தேதிய இதழிலும் அடுத்த இதழிலுமாக வெளியிட்டார். அவற்றிலிருந்து மாதிரியாகச் சில பாடல்களைப் பார்ப்போம் :

மாகாண உணவுக் கமிட்டி கூடியிருக்கிறது. அதில் மாகாணப் பிரதம மந்திரி பாடுகிறார்—

காரணம் இல்லாமலே
 காரியம் இல்லையன்றோ?
காரியம் செய்யாவிடில்
 தானியம். விளைந்திடுமோ?
ஆரிட்ட தீவினையோ
 அரிசி ஸ்டாக் குறைந்துபோச்சு
ஆணைப்படியினாலே
 அதிக உற்பத்தி செய்வீர்!

அடுத்து, மாகாண உணவு மந்திரியின் புலம்பல்—

காந்திஜி சொன்னார் என்று
 கண்ட்ரோலை எடுத்து விட்டோம்!
கார்த்திகை மாதந்தன்னில்
கடுகளவு மழையும் இல்லை!
சாந்தி மனத்தில் இல்லை
 சாதம் அடுப்பில் இல்லை!
சற்றும் இந்த உத்தியோகம்
 பார்க்கப் பிடிக்கவில்லை!

அவருக்கு ஆறுதலாகவும் உணவுப் பிரச்னையைத் தீர்ப்பதற்காகவும் சேர்ந்து,கனம் உறுப்பினர் ஒருவர் கானம் இசைக்கிறார்—

அக்ரி கல்ச்சரல் இலாகா ஒன்றிருக்குதாம்
 அதன் உதவி கிடைத்தால்
 ஆழமாகக் கலப்பை உழுகுதாம்!
பாக்டரியில் செய்த ட்ராக்டர் இருக்குதாம்
 அதைப் பார்த்த பேர்களின்
 பசித்த வயிறு பெருத்துப் போகுதாம்!
உதவி செய்ய உத்தாரம் தாருமே
 உங்கள் கவலை தீர்ந்து
 பதவியில் என்றும் இருப்பீர் பாருமே

விவசாய இலாகா டைரக்டர் மேடையில் தாவி ஏறிப் பாடுகிறார்—

தென்னைமரம்! தென்னைமரம்!
 சென்னைக்கேற்ற தென்னைமரம்!
அஞ்சே வருஷம் கொடுப்பீரேல்
 ஐம்பது லட்சம் பயிரிடுவேன்!
பஞ்சம் பஞ்சாய்ப் பறக்காதோ?
 பட்டினி பசியும் தொலையாதோ?

இதற்கு ஓர் உறுப்பினரின் எதிர்ப்பாட்டு—

அஞ்சு வருஷம்வரை பஞ்சம் காத்திருக்குமோ?
 இந்த வருஷக் கதை என்னவோ?

''இந்த வருஷத்துக்குத்தானே?'' என்று டைரக்டர் எதிர்த்துக் கேட்டு, ''இதோ'' என்றார்—

பொட்டாட்டோ! டொம்மாட்டோ!
 (போங்கள் உங்களுக்குப் புரியவில்லை!)
உருளைக் கிழங்கு, தக்காளி!
 உலகில் அற்புத உணவன்றோ?
சர்க்கரை வள்ளிக் கிழங்குண்டு
 சர்க்கார் பண்ணைகள் தானுண்டு.

இதைக் கேட்டு, கூட்டத்திலிருந்து விவசாயி ஒருவர் பொறுமை இழந்து அவசர ராகத்தில் பாடுகிறார்—

ரொம்ப சரி, ரொம்ப சரி
 ஜனவரிக்கு அப்புறம் பிப்ரவரி!
கம்பும் சோளமும் விளையாதோ?
 கடிதில் பஞ்சம் தீராதோ?
பம்பும் விரைவாய்த் தருவீரே!
 பெட்ரோலும் கொஞ்சம் கொடுப்பீரே!
வம்புப் பேச்சு வேண்டாமே
 வயல்கள் பேச்சால் விளையாவே!

விவசாயியின் இந்தக் கோபதாபக் கூற்றுக்கு விவசாய இலாகா மந்திரி, மலையாள மனோகரி ராகத்தில் தக்க பதில் கொடுக்கிறார்—

மந்திரி மாதவ மேனோன் ஞானே!
மந்திரம் தந்திரம் அறிந்திடுவேனே!
மரத்திலே அரிசி காய்க்கச் செய்வேனே!
உரத்தினில் உயர்ந்தது பசுந்தழைதானே!

இந்தப் பாட்டின் இறுதிச் சொல்லையே ஒரு மந்திரமாக எல்லோரும் பற்றிக்கொண்டு அபயக் கூட்டிசை பாடுகிறார்கள்—

அச்சமில்லை அச்சமில்லை
 அச்சம் என்ப தில்லையே!
பச்சைத் தழை உரம் இருக்க
 அச்சம் என்ப தில்லையே!
பத்து லட்சம் ஏக்க ராவில்
 பசுந் தழையைப் பயிரிட்டால்
பத்துக் கோடி டன் அரிசி
 பஞ்சம் தீரக் கிடைக்குமே..!

பாட்டைவிட அதிகமாகவும் நன்றாகவும் வசனத்தைப் பகடி செய்திருக்கிறார் கல்கி. வசன பாரொடியில் மாக்ஸ் பீர்பம் (Max Beerbhom) போன்ற புகழ் மிக்க கட்டுரையாளர்களுக்கு இணையாகச் சொல்லலாம் அவரை. இத்துறையில் அவருடைய கை வரிசைக்கு ஓர் உதாரணமாக, அவர் காலத்துப் பிரபல எழுத்தாளர் ஒருவருடைய நடையின் போலிப்பு:

நான் சொல்லப் போவது இன்னதென்று உங்களுக்குத் தெரியுமா? அந்தப் பழைய கதையை நான் திரும்பச் சொல்லப் போகிறேன் என்று நினைக்கிறீர்கள் அல்லவா? அது தான் இல்லை. மறுபடியும் கேட்கிறேன், உங்களுக்கு நான் சொல்லப் போவது தெரியுமா என்று. தெரியாது என்றால் ஏன் தெரியாது என்பதற்குக் காரணம் சொல்லுங்கள். காரணம் இல்லை என்றால் காரியம் இல்லை என்பது ஞாபகம் இருக்கட்டும். ஆனால் காரியம்! நீங்களுந்தான் காரியம் செய்கிறீர்கள்! நானுந்தான் காரியம் செய்கிறேன்! இதெல்லாம் காரியம் ஆகுமோ? என்ன ஐயா விழிக்கிறீர்? பதில் சொல்லுமே! (ஆ. வி. 8-4-34)

''ஈ எறும்பு முதலியவைகளுக்குக் கேட்கும் சக்தி கிடையாது. அவைகள் முழுச் செவிடுகள்.'' —கே.வி.

வாழ்க்கையில் சந்தோஷமளிக்கும் பல தருணங்கள் ஏற்படுகின்றன

# தலைவலி உங்கள் சந்தோஷத்தை கெடுக்க விடாதீர்கள்

# 2 ஆஸ்ப்ரோ சாப்பிடுங்கள்




**ASPRO**

Nicholas

மைக்ரோஃபைன் ஆஸ்ப்ரோ வலியை அதிவேகமாக வெளியே இழுத்து விடுகிறது

A.G.62 TM

''ராணி தேனீ, தான் ஆறு வருடங்கள் வாழ உட்கொள்ளும் விசேஷ உணவின் பெயர் 'ராயல் ஜெல்லி'. மற்ற தேனீக்கள் 30 முதல் 35 நாட்களே வாழும். பிறகு மடிந்து விடும்.'' —கே. வி



யாருடைய நடையை இதில் கல்கி கேலி செய்திருக்கிறார் என்பதை வாசகர்களே ஊகித்துக் கொள்வார்களாக. இவ்வாறே, இனி வரும் பகுதிகளின் மூல ஆசிரியர்களை இனம் காண்பதும் வாசகர்களின் பொறுப்பாகவே இருக்கட்டும் :

ஒரே ஒரு வார்த்தை. தனிப்பட்ட ஒரு வார்த்தை. ஐந்து எழுத்துக்கள் கொண்டது. ஐந்தே எழுத்துக்கள் அடங்கியஒரு வார்த்தை. எழுத்துக்கள் ஐந்துதான். ஒரே வார்த்தை தான். ஆனாலும் அதன் சக்தி! அந்த ஐந்து எழுத்து வார்த்தையைச் சொன்னால் நாவில் ஜலம் வரும்; கண்ணில் ஜலம் வரும்; மூக்கில் கூட ஜலம் வரும்! அப்படிப்பட்ட வார்த்தை ஹா! அந்த வார்த்தை! அம்மம்மா! அந்த ஒரு வார்த்தை!

ஐந்து எழுத்துக்கொண்ட அந்த வார்த்தை என்ன தெரியுமா? அதுதான் வெங்காயம்! (மேற்படி)

வாழ்ந்தால் உயிருடன் வாழ வேண்டும்; இறந்தால் இமய மலையைப் போல் இறக்க வேண்டும். உயிருக்கும் இமய மலைக்கும் என்ன சம்பந்தம் என்று யாராவது ஒரு மேதாவி கேட்கலாம். ஏன் சம்பந்தம் இல்லை என்று நான் கேட்கிறேன். மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடி போடுவது என்பது ஒரு தமிழ்ப் பழமொழி. மொட்டைக் காலுக்கும் முழந்தலைக்கும் ஒருவர் முடி போட்டாரானால், நாம் ஏன் உயிரையும் இமயமலையையும் பிணைத்துக் கட்டக் கூடாது? மோட்டார் ஓட்டவும் ஆகாய விமானம் விடவும் கற்றுக் கொண்ட மனிதனுக்கு இந்தப் பிணைப்பு வேலை அவ்வளவு பெரிய காரியமா? மனிதன் வேண்டுமானால் ஆகாயத்தில் பறக்கட்டும்; ஆனால் அவன் தென்னை மரத்துக்கு நேரே பறக்க முடியாத படி தும்பு போட்டு அவனைக் கட்டாமல் விடக் கூடாது. மனிதனானால் என்ன? எருமைக் கன்றானால் என்ன? மனிதனையும் எருமைக் கன்றையும் பிரியக் கூடாத நிலையில் சேர்த்துக் கட்டி நகாஸ் வேலை செய்துவிட வேண்டும். இதுதான் வேலைப்பாட்டின் நயம். (மேற்படி)

கல்கியின் சுவைமிக்க கட்டுரைகளில் ஒன்று, ''ஓ, மாம்பழமே!'' இங்கிலாந்தில் முதல் முதலாக இந்திய மாம்பழங்கள் இறக்குமதியானபோது, அந்த நாட்டுத் தலைவர் அக்கனியைப் பற்றி என்ன சொல்லி இருப்பார்கள் என்பதையும், அவர்களுடைய கூற்றைக் கேட்டு இந்தியத் தலைவர்கள் என்ன கூறியிருப்பார்கள் என்பதையும், அதில் கல்கி போலிப்பு செய்து காட்டியிருக்கிறார். முழுதாகச் சுவைத்து அனுபவிக்க வேண்டிய மாம்பழம் இது : ஆகவே இதைத் துண்டம் போடாமல் விட்டுவிடுவோம்.

1934ல் வெளியான இந்த மாம்பழக் கட்டுரையை, படித்தவுடனேயே பாராட்டி எழுதிய டி. கே. சி, ''ஒரு நூதனச் சிங்காரச் சிருஷ்டி தமிழில் பிறந்திருக்கிறது'' என்றார்; அதில் துள்ளி விளையாடிய தமிழ் நடையையும் அவருக்கே உரிய பாணியில் வியந்து வர்ணித்தார்.

அந்தக் காலத்திலேயே வியக்கத் தக்கதாய் அமைந்துவிட்ட கல்கியின் நடை, பின்னர் இருபது ஆண்டுகளில் மேலும் மேலும் மேம்பட்டு, தனித் தன்மை வாய்ந்த கல்கித் தமிழாகப் பரிணமித்தது.

கல்கியின் பேனா நடைக்கும் அவருடைய பாத நடைக்கும் ஒரு தொடர்பு உண்டு. ஏதாவது ஒன்றை எழுதுவதற்கு முன்னால் அவர் ஊஞ்சலில் வீசி வீசி ஆடுவார்; அல்லது வளைய வளைய நடப்பார். அவருடைய அந்தச் சிந்தனை நடையை, ''புனுகுப் பூனையின் நடை'' என்று நாரதர் ஸ்ரீநிவாச ராவும், ''கூண்டுப் புலியின் நடை'' என்று ராஜேந்திரனும் வர்ணித்திருக்கிறார்கள்.

இன்னும் ஒருவர் — சிறந்த நகைச்சுவை எழுத்தாளர் — அந்த நடையைப் பற்றி, பாராட்டுடன் பரிகாசத்தை நேர்த்தியாய்க் கலந்து ஒரு கட்டுரை எழுதி யிருக்கிறார்:

நல்ல நடை கையாள வேண்டும் என்று, எனக்கு எழுத ஆரம்பித்ததிலிருந்தே ஆசை. இதற்காக நல்ல நடையைக் கையாண்டுவந்த ஒரு பெரிய எழுத்தாளர் என்ன செய்கிறார் என்று கவனிக்க ஆரம்பித்தேன்.

அந்தப் பெரிய எழுத்தாளர், தாம் என்ன எழுத வேண்டியிருந்தாலும் சரி, டக்கென்று உட்கார்ந்து சடக்கென்று எழுத ஆரம்பிக்க மாட்டார். எழுத வேண்டிய விஷயங்களைப் பற்றித் தீர்க்காலோசனை பண்ணுவதற்காகக் கொஞ்ச நேரம் மேலும் கீழுமாக உலாவுவார். அதற்குப் பிறகே உட்கார்ந்து எழுத ஆரம்பிப்பார். இதைப் பார்த்து, எழுத ஆரம்பிப்பதற்கு முன் மேலும் கீழும் நடக்க வேண்டியது மிகவும் அவசியம் என்று நான் உணர்ந்தேன். அப்படியே நடக்கவும் ஆரம்பித்தேன்.

என்ன ஆச்சரியம்! நான் எங்கள் வீட்டுக் கூடத்தில் பத்து நடை மேலும் கீழும் நடந்திருக்க மாட்டேன். நான் எதைப் பற்றி எழுதவேண்டும் என்று நினைத்தேனோ அதைப் பற்றிய கருத்துக்கள் என் மனத்தில் சடசடவென்று உதயமாயின. உடனேயே உட்கார்ந்து கட்டுரையைச் சடசடவென்று எழுதி முடித்தேன். கட்டுரையைப் பின்னால் வாசித்தவர்கள், ''நடை வெகு அழகாய் அமைந்

இருக்கிறது'' என்று என்னைப் பாராட்டினார்கள்....

ஒரு கட்டுரை எழுதுவதற்கு அந்தப் பெரிய எழுத்தாளர் எவ்வளவு தூரம் நடக்கிறார் என்று கணக்குப் போட்டுப் பார்த்தேன். அவர் கூடத்தின் நீளத்தை அவர் இல்லாத சமயம் பார்த்து அளந்து, அதை அவர் எத்தனை நடை மேலும் கீழுமாக வந்தாரோ, அந்த எண்ணிக்கையால் பெருக்கியதில், ஒரு பர்லாங் தூரம் வந்தது.

ஒரு பர்லாங் தூரம் நடந்துவிட்டு அவர் அத்தனை நல்ல நடை எழுதினால், நாம் ஒரு மைல் தூரம் நடந்தால் எத்தனை நல்ல நடை எழுத முடியும் என்று தீர்மானித்து ஒவ்வொரு கட்டுரைக்கும் ஒவ்வொரு மைல் தூரம் நடக்க ஆரம்பித்தேன்.

மேலும்' நடந்து செல்லும் இந்தக் கட்டுரையின் நடையிலிருந்தே இதை எழுதியவர் நாடோடி என்பதை ஊகித்திருக்கலாம். இதை அவர் கல்கியில் துணை ஆசிரியராய் இருக்கையில் எழுதி, கல்கியிடமே காட்டி இரட்டை ''பேஷ்'' பாராட்டைப் பெற்று, கல்கியின் 25-11-45 இதழில் வெளியாகுமாறு அச்சுக் கோக்கக் கொடுத்தார். எழுதியபின், இதை வெளியிடுவதற்காக நாடோடி நடந்த நடை கொஞ்சந்தான்; எழுதுவதற்குமுன் அவர் நடந்தது எவ்வளவோ ?

கல்கியைப் பரிகாசம் செய்து பெருமைப்படுத்திய இன்னொருவர், கல்கியின் இயற்பெயரையே கொண்ட ஆர். கிருஷ்ணமூர்த்தி — அல்லது பலரும் அறிந்தபடி விகடம் கிருஷ்ணமூர்த்தி. அவருடைய விகடக் கச்சேரிகளில் வெகுவாகச் சிரிப்பை உண்டாக்கும் பகுதி புகழ் மிக்க சிலரைப் போல் வேடிக்கையாகப் பாடியும் பேசியும் காட்டுவதாகும். அதிலே ஒரு சிறப்பான உருப்படி, கல்கியைப் போலக் குரலை வைத்துக் கொண்டும், சைகைகள் செய்தும், உரையாடலும் மேடைப் பேச்சும் நிகழ்த்துவதாகும். அவருடைய கச்சேரிகளுக்கு கல்கி அடிக்கடி சென்று, தம்மை அவர் கேலி செய்வதைக் கண்டும், கேட்டும் மகிழ்ந்தார்; பிறருடன் சேர்ந்து சிரித்தார்; அவரைப் பாராட்டிப் பேசி மாலை அணிவித்தார்.

(தமது விகடக் கலைக்குக் கல்கி பெரிதும் ஊக்கம் ஊட்டினார் என்றும், அவருடைய அன்புக்குரிய இளைய நண்பர்களில் ஒருவராய்த் தம்மைக் கருதினார் என்றும் கிருஷ்ணமூர்த்தி நன்றியுடன் கூறுகிறார். இசைக் கலையில் புகழ் மிக்க எம். எல், வசந்தகுமாரியை அவர் மணந்தபோது தமது பாராட்டையும், நல்வாழ்த்தையும் கல்கி தெரிவித்ததுடன், விவாகப் பதிவின்போது ஒரு சாட்சியாகவும் இருந்து தம்பதியரைக் கௌரவித்தாராம்.)

மிருகேந்திரனாகிய சிங்கத்துக்குச் சிரிக்கத் தெரியாது. புலிக்கும் யானைக்கும் சிரிக்கத் தெரியாது. குதிரை கனைப்பது சிரிப்பது போல் இருக்குமே தவிர அதுவும் சிரிப்பதில்லை. மகா கனம் பொருந்திய ஆகாகான் அவர்களின் பந்தயக் குதிரைகூட பந்தயத்தில் தோற்றுப் போகும் மற்றக் குதிரைகளைப் பார்த்துச் சிரிப்பதில்லையாம்! ஜீவராசிகளில் மனிதனுக்கு முந்தையப் படியில் உள்ள வானரம் எத்தனை எத்தனையோ கோணங்கிக் கொனஷ்டைகள் செய்வதைப் பார்த்திருக்கிறோம். அத்தகைய குரங்குகூடச் சிரிப்பது கிடையாதாம். குரங்கு பல்லைக் காட்டினால் அது கோபத்துக்கு அடையாளமாம். பறவைகள் சிரிப்பதில்லை என்பதைச் சொல்லத் தேவையில்லை....

பறவைகளுக்கு அளித்த இறகுகளையும், விலங்குகளுக்கு அளித்த வாலையும் கடவுள் மனிதனுக்குக் கொடுக்க மனமில்லாமல் விட்டுவிட்டார். ஆனால் அந்தப் பாக்கியங்களுக்கெல்லாம் மேலான சிரிக்கும் பாக்கியத்தைக் கொடுத்திருக்கிறார்.

அவ்விதம் கடவுள் மனிதனுக்கென்று பிரத்தியேகமாய் அளித்திருக்கும் வரப்பிரசாதமாகிய சிரிப்பை உண்டாக்கவும் பெருக்கவும் வளர்க்கவும் பாடுபடுகிறவர்கள் எல்லாரும் கடவுளுக்கு உகந்த திருப்பணியைச் செய்கிறவர்கள் அல்லவா?

இவ்வாறு கல்கி, 1953ல் வெளியான ''மூன்று மாத ரகசியம்'' என்ற ஒரு புத்தகத்துக்குத் தாம் வழங்கிய அணிந்துரையில் நகைச்சுவையின் தத்துவத்தை விளக்கிச் சொல்லும் பகுதியில் எழுதியுள்ளார். அந்தப் புத்தகத்தில் உள்ள கதை, கட்டுரைகள் யாவும் கல்கி பத்திரிகையில் வெளிவந்தவை. அதன் ஆசிரியர் எம். எஸ். மணி, எடுத்த எடுப்பிலேயே, ''உங்கள் ராசி பலன்'' என்ற கட்டுரையின் மூலம், கல்கியையும், கல்கி வாசகர்களையும் கவர்ந்தவர். சோதிடத்தில் மக்களுக்கு உள்ள நம்பிக்கையைத் தமது விற்பனைப் பெருக்கத்துக்காகப் பயன்படுத்திக் கொண்டு, சில பத்திரிகைகள் வெளியிடும் ராசி பலன் பத்திகளை, அவற்றின் பரிபாஷையிலேயே அந்தக் கட்டுரையில் அவர் ''பாரொடி'' செய்திருந்தார். கேலிப் போலிப்பையும் அங்கத பாணியையும் எம். எஸ். மணி திறம்படக் கையாளுவதைக் கண்ட கல்கி, தாம் சிறிது காலம் பூண்டிருந்த ''விடாக்கண்டன்'' என்ற புனைபெயரை அவருக்கு விட்டுக் கொடுத்து, அக்கிரமங்களையும் அநீதிகளையும் நகைத்துப் புடைக்கச் செய்தார். (தொடரும்)

---

''ஆண்டுக்குப் பத்து டன் மண்ணை உட்கொண்டு வெளியே தள்ளுகிறது மண் புழு.''
—வெங்கட்

# அறிவு விழித்தது

## வீ. லக்ஷ்மி நரசிம்மன்

பசுமையான வயல்வெளிகளுக்கு நடுவில் மரவட்டை போல் ஊர்ந்து கொண்டிருந்தது அந்த ரயில். அதில் ஓர் இரண்டாம் வகுப்புப் பெட்டியில் பயணம் செய்து கொண்டிருந்த ராஜாவின் மனமோ வாயு வேகத்தில் சென்று கொண்டிருந்தது. தன் சொந்த ஊரைப் பற்றிய இனிமையான கற்பனையில் மூழ்கியிருந்தான் ராஜா.

சிறு வயதிலேயே தாய் தந்தையரை இழந்தவன் ராஜா. ஆனாலும் பெற்றோரை இழந்த குறை தெரியாமல் அவனை அவன் மாமா சிவமும் அவர் மனைவி மரகதமும் வளர்த்தனர். அவன் மாமாவுக்கு மதுமதி ஒரே பெண். ராஜாவுக்காகப் பிறந்தவள். அப்படித்தான் அவன் மாமாவும், மாமியும் சொல்லிக் கொண்டார்கள். மதுமதி ராஜாவைவிட இரண்டு வயது சிறியவள். விளையாட்டுத் தோழமையாய் அரும்பிய ராஜா – மதுமதியின் தொடர்பு பள்ளிப் பருவத்தில் நட்பாய் மலர்ந்து பின் கல்லூரிப் பருவத்தில் காதலாய்க் கனிந்தது. ராஜா என்ற பெயருக்கேற்ப வாட்டசாட்டமாய் இருந்தான் ராஜா. சிரித்த முகமும், இனிமையான பண்புகளுமாக அந்தக் கிராமத்திலுள்ள அனைவரது நன்மதிப்பையும் பெற்றிருந்தான் ராஜா. பூர்வீக சொத்தாக அவனுக்குக் கொஞ்சம் நிலமும், ஒரு வீடும் இருந்தன. தங்கள் மகளின் அதிர்ஷ்டத்தை நினைத்துச் சிவம் தம்பதி மகிழாத நாள் இல்லை. ராஜாவும், மதுமதியும் பள்ளிப் படிப்பை முடித்துக் கல்லூரியில் காலடி வைத்தனர்.

**அறிமுக எழுத்தாளரின் கதை**

அவர்கள் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த காலத்தில்தான் அது நடந்தது. சாதாரணக் காய்ச்சல் என்று படுக்கையில் விழுந்த மரகதம் திரும்ப எழுந்திருக்கவேயில்லை. சிவம் சிறகொடித்த பறவையானார். காலச் சக்கரம் வேகமாகச் சுழன்றது. ராஜாவும், மதுமதியும் தங்கள் கல்லூரிப் படிப்பை முடித்தனர். பள்ளி நாட்களிலிருந்தே ராஜாவுக்கு ராணுவ வாழ்க்கையில் ஒரு லயிப்பு. ராணுவ வீரர்களைப் பற்றிய செய்திகளையும், கதைகளையும் விடாமல் படிப்பான். தானும் ஒரு ராணுவ வீரனாகிச் சாகசங்கள் செய்ய வேண்டும் என்ற எண்ணம் அவனது இள மனத்தில் ஆழப் பதிந்தது. இள வயதில் ஆசையாக இருந்தது நாளாவட்டத்தில் இலட்சியமாக உருவெடுத்தது. கல்லூரியில் என். ஸி. ஸி.யில் சேர்ந்து தன் திறமையால் ஸார்ஜெண்டாக உயர்ந்தான். பரிசுகளும், பாராட்டிதழ்களும் வாங்கிக் குவித்தான்.

ராஜாவும், மதுமதியும் படிப்பை முடித்தவுடனேயே அவர்களது திருமணத்துக்கு ஏற்பாடு செய்ய ஆரம்பித்தார் சிவம். வேலை பார்த்துக் கொண்ட பிறகுதான் திருமணம் என்று பிடிவாதமாகச் சொல்லிவிட்டான் ராஜா. வேறு வழியின்றி அவரும் மௌனமாக இருந்தார். ராஜாவுக்கு என்ன செய்வது என்றே புரியவில்லை. அவன் லட்சியம் மாமாவுக்குக் கட்டோடு பிடிக்காது என்பதை அவன் நன்கறிவான். குழம்பிய நிலையில் அவன் மதுமதியை அணுகினான். இன்று நினைத்தாலும் அது இப்பொழுதுதான் நடந்தது போலிருக்கிறது. மதுமதி ஆற்றிலிருந்து தண்ணீர்க் குடத்துடன் திரும்பிக் கொண்டிருந்தாள். அவன் எதிரே வருவதைக் கண்டதும் அவள் கால்கள் பின்னலிட்டன. குடத்தைக் கீழே இறக்கி வைத்துவிட்டு அவனை எதிர்பார்த்து நின்றாள் அவள். அவன் அவளை நெருங்கினான். அவள் விழிகள் நிலம் நோக்கித் தாழ்ந்தன.

''மதுமதி.''

''உம்.''

''உங்கிட்டே ஒண்ணு கேக்கணும்.''

''கேளுங்களேன்.''

''உனக்குத்தான் தெரியுமே. ராணுவத்தில் சேர்றது என்னோட லட்சியம்கிறது. உனக்கு அதிலே பூரண சம்மதமா ?''

''நீங்க இன்னும் என்னைச் சரியாப் புரிஞ்சுக்கலைன்னு படுது.''

அவள் கண் இமைகள் படபடத்தன. அவளை ஏறிட்டு நோக்கினான்.

'' ஏன் ?''

''உங்க லட்சியத்துக்கப்புறம் எனக்குன்னு தனியா ஓர் ஆசை இருக்குமா ?''

இந்தப் பதிலைக் கேட்டதும் சந்தோஷத்தால் அவன் இதயம் விம்மியது. அவளை அப்படியே அள்ளிக் கொள்ளக் கரங்கள் துடித்தன. ஆவலை அடக்கிக் கொண்டான்.

''மதுமதி! உண்மையில் நான் பாக்கியசாலி !''

அதற்கு மேல் அவனுக்கு வேறொன்றும் சொல்லத் தோன்றவில்லை.

அதன் பிறகு நடக்க வேண்டியவைகளில் அவன் சுறுசுறுப்பாக ஈடுபட்டான். ஒரு நண்பனின் திருமணத்துக்குப் போவதாக மாமாவிடம் பொய் சொல்லிவிட்டு இண்டர்வியூவுக்குப் போனான். அவனுக்கு செலக்ஷனும் கிடைத்தது. அதன் பிறகு... அதன் பிறகுதான் பூகம்பமே ஏற்பட்டது. அந்த நாள் இன்றும் அவன் நினைவில் பசுமையாக இருந்தது. அவன் ராணுவத்தில் சேரப் போவதாகக் கூறியவுடன் அவர்தான் கோபத்தில் எப்படிக் குதித்தார்? அவரைக் கேட்காமல் முடிவு செய்ததற்காக எப்படியெல்லாம் சாடினார். அவன் முடிவை மாற்றிக் கொள்ளும்படி கெஞ்சினார், அழுதார், அச்சுறுத்தினார். ஆனால் அவனோ தன் முடிவில் தீர்மானமாக இருந்தான். அன்று இருவருக்கும் நடந்த வாக்குவாதம் இன்னும் அவன் செவியில் ரீங்கரித்துக் கொண்டிருந்தது.

''டேய், என்னோட கோவத்தைக் கிளறாதே! ஏற்கனவே நான் மனமொடிஞ்சு போயி இருக்கேன். கண்ணுக்குக் கண்ணாக வளர்த்த ஒரே மகளை ஒரு பட்டாளத்தானுக்குக் கட்டிக் குடுத்துட்டு எப்போ என்ன நடக்குமோன்னு வயத்திலே நெருப்பைக் கட்டிக்கிட்டு உட்கார்ந்திருக்க இந்தத் தள்ளாத வயசிலே என்னாலே முடியாது. ராஜா, இதை மனசிலே வைச்சுக்கோ. மதுமதியோட சந்தோஷமான வாழ்க்கை தான் எனக்கு முக்கியம். ஒரு பொண்ணு சுமங்கலியா சாகறது தான் அவளுக்குப் பெருமை. ரெண்டுலே எது வேணுமின்னு முடிவு பண்ணிக்கோ. ஒண்ணு மதுமதி இல்லேன்னா, உன்னோட லட்சியம்.''

''எனக்கு என் லட்சியம்தான் பெரிசு.''

ராஜா இப்படிச் சொன்னவுடன் கோபத்தால் அவர் கண்கள் சிவந்தன. ''அட, துரோகி. பாம்புக்குப் பாலூட்டி வளர்த்தேனடா! உன்னை வளர்த்தவனுக்கு இதுதான் நீ காட்டுற நன்றியா? அப்படின்னா சரி. இன்னையிலேருந்து நான் உனக்கு மாமனுமில்லே. நீ எனக்கு மருமகனும் இல்லே. நான் செத்தாலும் என் பொணத்தைக்கூட நீ பார்க்கக் கூடாது. அதோட மதுமதியையும் மறந்துவிடு.'' முகத்தில் அறைவது போல் கதவை மூடிக் கொண்டு வீட்டுக்குள் போய் விட்டார் அவர். சற்று நேரம் அப்படியே திக்பிரமை பிடித்து நின்று விட்டான் ராஜா. அவனுக்கு ஒருபுறம் ஆத்திரமாகவும் மறுபுறம் வேதனையாகவும் இருந்தது. அன்று ஊரைவிட்டுப் புறப்பட்டவன்தான். நான்கு வருடங்கள் கழித்து இப்பொழுதுதான் ஊருக்குப் போகிறான். நடுவில் இரண்டு முறை மதுமதிக்குக் கடிதம் போட்டான். மாமாவின் கோபம் தணியவில்லையென்றும், தணியக் கூடியதாக இல்லை என்றும் அவளிடமிருந்து பதில் வந்தது. அதன் பிறகு அவன் மதுமதிக்கும் எழுதுவதை நிறுத்தி விட்டான். அவன் தனது வேதனையையும், தாபங்களையும் கொட்டி எவ்வளவோ கடிதங்கள் எழுதி விட்டான். ஏனோ அவன் பதிலே போடவில்லை.

ரயில் அவன் கிராமத்தை அடைந்தபோது நன்றாக இருட்டிவிட்டது. ராஜா, ரயிலை விட்டு இறங்கி நடையைக் கட்டினான்.

தெரு விளக்குகள் மினுக் மினுக் என்று அழுது கொண்டிருந்தன. நேராகத் தன் நண்பன் கோபாலின் வீட்டை அடைந்தான். கோபால் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். ராஜாவின் குரலைக் கேட்டதும் கையை உதறிக் கொண்டு ஓடி வந்தான் கோபால். அவன் அம்மாவும், அப்பாவும் அவன் சந்தோஷத்தில் பங்கு கொண்டனர். வழக்கமான குசல விசாரிப்புக்கள் எல்லாம் முடிந்த பின் ராஜாவும் சாப்பிட்டு எழுந்தான்...

''டேய், ராஜா! ஆமா நீ நேரே உங்க மாமா வீட்டுக்குப் போகாம ஏண்டா இங்கே வந்துட்டே? பாவண்டா மதுமதி. தினமும் உங்கிட்டேயிருந்து தபாலை எதிர் பார்த்து, எதிர்பார்த்து ஏமாந்து போறா.''

''கோபால் நான் இப்போ எங்க மாமா வீட்டுக்குப் போய் அவர் என்னைப் பார்த்துக் கோபத்தில் ஏதாவது திட்ட, நானும் கோபத்திலே திரும்பி வந்துட்டேன்னா அப்புறம் எங்கே எங்க உறவைச் சேர்ப்படுத்த முடியாமே போயிடுமோங்கிற பயத்திலேதான் நான் நேரா உங்க வீட்டுக்கு வந்தேன்.



ரொம்ப அசதியாயிருக்கு. எல்லாம் காலையிலே பார்த்துக்கலாம்'' என்று கூறிவிட்டு ராஜா கோபால் வீட்டிலேயே படுத்துவிட்டான்.

மறு நாள் அதிகாலையிலேயே துண்டு, சோப்புப் பெட்டி சகிதம் காவிரிக்குப் புறப்பட்டான் ராஜா. அதிகாலை வேளையில் மதுமதி தண்ணீர் எடுப்பதற்காகக் காவிரிக்கு வருவாள் என்பது அவனுக்கு அத்துப்படி. அவர்கள் காதலில் முக்கிய அங்கம் வகித்த அந்தக் காவிரிக் கரையைக் கண்டதும் அவன் மனத்தில் ஓர் இனம் தெரியாத பாச உணர்வு எழுந்தது. அந்த நான்கு வருட காலத்தில் அந்தக் காவிரிக் கரையில் எந்தவித மாற்றமும் இல்லை. சற்றுத் தூரத்தில் மதுமதி தன் தன் தோழியர் குழாத்துடன் வந்திருந்தாள். ராஜா அருகிலிருந்த அரச மரத்தின் பின்னால் ஒளிந்து கொண்டான். பட்டாம் பூச்சியாய்ப் பறந்து வந்த மங்கையர்குழாம் குடத்தைத் துலக்கித் தண்ணீர் எடுப்பதில் மூழ்ந்து கொண்டிருந்தது.

ராஜா ஒளிந்திருந்த மரத்துக்குச் சற்றுத் தொலைவில் மதுமதி குடத்தைத் துலக்கிக் கொண்டிருந்தாள். அவளைக் கண்ட ராஜாவுக்குப் பகீரென்றது. வதங்கிய மலராகக் காட்சி அளித்தாள் மதுமதி. அவள் முகத்தில் இனம் புரியாத சோகம் விரவியிருந்தது. அவளது அந்த நிலைமைக்குத் தான்தான் காரணம் என்று எண்ணியபோது அவன் மனம் வேதனையால் நிறைந்தது.

''மதுமதி'' என்று மெதுவாக அழைத்தான்.

மகுடி கேட்ட நாகம் போல் சடாரென்று தலையை உயர்த்தினாள் மதுமதி. அந்தக் குரல்...அவள் செவிகளில் தேனுகப்பாயும் அந்தக் குரல்....அவள் கரு விழிகள் நாலாபுறமும் சுற்றிச் சுழன்று அரச மரத்தில் நிலைத்தது. ராஜாவின் முகம் மட்டும் தெரிந்தது.

சற்று நேரத்தில் கை வளைகள் குலுங்கும் ஒலி கேட்டது. மதுமதி வேகமாக அவனை நோக்கி வந்து கொண்டிருந்தாள். வேகமாக வந்தவள் அவனுக்குச் சற்றுத் தூரத்திலேயே நின்றுவிட்டாள். அவள் விழிகள் அவனை ஆசை தீர மொய்த்தன. அவன் புன்னகையுடன் நின்று கொண்டிருந்தான்.

''வா..மதுமதி.... ஏன் நின்னுட்டே ?''

அவன் சொன்னதைக் கேட்டதும் புயலாய் வந்து அவன் கரங்களுக்குள் தஞ்சமடைந்தாள். அவளது முகத்தை நிமிர்த்தினான். அவள் கன்னம் கண்ணீரால் நனைந்திருந்தது. பதறி விட்டான் ராஜா.

''ஏய் மதுமதி, என்ன இது? என்னை சந்தோஷமா வரவேற்க வேண்டிய நீ இப்படியா அழறது? நீ அழுவதைப் பார்க்கவா மூவாயிரம் மைல் தாண்டி ஓடி வந்திருக்கேன்.''

'' உங்களுக்கென்ன இப்ப சொல்லுங்க ! இந்த நாலு வருஷத்திலே எத்தனை கடிதம் போட்டிருக்கீங்க. வந்த ரெண்டு கடிதமும் கடமைக்காக வந்ததே தவிர காதலோட வரலே.'' அவள் கேவல் அடங்கவில்லை. அவன் அவளது தோளைப் பற்றி அருகிலிருந்த மரத்தடியில் உட்கார வைத்துத் தானும் உட்கார்ந்து கொண்டான்.

''பைத்தியமே! நான் கடிதம் எழுதாததினாலே உன் மேல் எனக்குள்ள காதல் இல்லேன்னு போயிடுமா ? சந்தர்ப்பம் சரியில்லை. எழுதலே. அதுக்கு என்னை மன்னிச்சுடு. மதுமதி, எனக்கு ஒரு மாச லீவு இருக்கு. அதுக்குள்ளே நம்ம கல்யாணம் நடந்துடணும்.''

''அது உங்க கையிலேதான் இருக்கு.''

'' நான் இப்பவே தயார். ஆனால் உங்கப்பா ?''

''அவர் இன்னும் அப்படியேதான் இருக்காரு. உங்க பேச்சை எடுத்தாலே கோவப்படுறாரு. நான் தினமும் அவரோட வாதாடிக்கிட்டு இருக்கேன். பதில் சொல்ல முடியாம நான் ஏதாவது கேட்டா அழுதிடுறாரு. இல்லேன்னு ஆத்திரத்திலே கத்தறாரு. ஆனால் அவரோட முடிவிலேயிருந்து மட்டும் அவர் மாறத் தயாராயில்லை. எனக்கு இப்போ வர வர நாம இப்படியே கடைசி வரை இருந்துட வேண்டி வருமோன்னு பயமாயிருக்கு.'' அவள் கண்களில் நீர் துளித்தது.

ராஜா ஆதரவாக அவளை இழுத்து அணைத்துக் கொண்டான். உலகத்து அமைதியையெல்லாம் அந்த அணைப்பிலே ஒடுங்கி உணர்ந்தாள் அந்தப் பேதை.

சாய்வு நாற்காலியில் அமர்ந்து முகட்டைப் பார்த்துக் கொண்டிருந்தார் சிவம். தம் அருகில் யாரோ நிற்பது போல் உணரவே ஏறிட்டுப் பார்த்தார். மதுமதி நின்று கொண்டிருந்தாள்.

''என்னம்மா வேணும் ?''

'' ராஜா லீவிலே வந்திருக்கார்.''

''உம். கேள்விப்பட்டேன்.''

''எங்க கல்யாணத்தை நீங்க அப்பவே முடிச்சிருந்தா இப்படி நாங்க ரெண்டு பேரும் தவிக்க வேண்டியதில்லை.''

''ஏம்மா தன் பெண் மஞ்சள் குங்குமத்தோட வாழணுமின்னு ஒரு தகப்பன் ஆசைப்படறது குற்றமாம்மா ?''

''ஏம்ப்பா கடைசியிலே உங்க கய கௌரவத்துக்காக என்னோட வாழ்க்கையோட விளையாடறீங்களா ? என்னைக் கடைசி வரைக்கும் இப்படியே வைச்சிருக்கலாமுன்னு முடிவு பண்ணிட்டீங்களா ?'' அவள் குரல் சற்றுச் சூடாக ஒலித்தது.

'' நானு அப்படிப் பிரியப்படறேன் ? இப்பவே சரிசொல்லு: எத்தனையோ பயலைக் கியூவிலே கொண்டு வந்து நிறுத்தறேன் !''

''அப்படியே அவுங்ககிட்டே சொல்லி அழைச்சிட்டு வாங்க, அவுங்க உங்க பெண்ணோட பொணத்துக்கு மாலை போடணுமின்னு! இந்தப் பிறவியிலே எனக்குக் கல்யாணம்னு ஒண்ணு இருந்தா அது ராஜாவோடதான்.'' அவளுக்கு அழுகை முட்டிக் கொண்டு வந்தது. சிவத்தின் மனம் அமைதி இழந்து தவித்தது.

அமைதி இழந்த மனத்துக்கு ஆறுதல் வேண்டுமே ! கோயிலை நோக்கி நடந்தார் சிவம். பொழுது நன்றாக இருட்டிவிட்டது.

கோயில் வெறிச்சோடியிருந்தது. ஒருவரையும் காணவில்லை. பிராகாரத்துப் பவள மரத்தடியில் தம் காலில் ஊன்றுகோலைப்



'' சூரியனுடைய சக்தியில் 3/10,000,000 பங்குதான் பூமியை வந்து அடைகிறது. இதில் 5 சதவீதம் குறைந்தாலும் மனித குலம் பூண்டற்றுப் போய் விடும்.''

—வெங்கட்ராமன்

போட்டுக் கொண்டு ரங்கதுரை விசும்பிக் கொண்டிருந்தார். பதறிக் கொண்டு அருகில் சென்றார் சிவம்.

''பட்டாளத்தாரே, என்னய்யா, சமாசாரம்? கொலைகார எதிரிகளையே கண்டு கலங்காத நீ இப்படி அழுதுகிட்டு உட்கார்ந்திருக்கே?'' ஆதரவாக அவரது தோளில் கையைப் போட்டபடி அவரது அருகில் உட்கார்ந்தார் சிவம். ரங்கதுரையின் மேல் சிவத்துக்கு மிகுந்த மதிப்பு உண்டு. அந்தப் பகுதியிலேயே முதலில் ராணுவத்தில் சேர்ந்ததனால் அவரை எல்லோரும், பட்டாளத்தார் என்றுதான் அழைப்பார்கள். போரில் வீர சாகசங்கள் செய்து ஒரு காலையும் ஒரு கண்ணையும் இழந்தவர். தம் மகனையும் ராணுவத்தில் சேர்த்துவிட்டார். இரண்டு மாதங்களுக்கு முன் போரில் அவன் வீர மரணம் அடைந்து விட்டான். ஒரு வேளை அவனது நினைப்பு வந்துதான் அழுகிறாரோ என்று எண்ணினார் சிவம்.

''உன் வேதனையை எங்கிட்டே பகிர்ந்துக்கோயேன். கொஞ்சம் மனசாவது ஆறுதல் அடையும்.''

''உங்கிட்டே சொல்லி என்ன ஆகப் போவுது. நம்ம ரெண்டுபேரோட கொள்கையும் எதிரானது.''

''அட, என்னன்னுதான் சொல்லேன்.''

ரங்கதுரை கண்களைத் துடைத்துக் கொண்டு பேச ஆரம்பித்தார். ''உனக்குத்தான் தெரியுமே சிவம். நான் பட்டாளத்து வாழ்க்கையைப் போக்கத்துப் போய், ஏத்துக்கலை. விரும்பித்தான் ஏத்துக்கிட்டேன்.''

''இப்போ அதுக்கும் உன்னோட துயரத்துக்கும்என்னசம்பந்தம்?'' இடைமறித்தார்சிவம்.

''நான் சொல்றதை முழுக்கக் கேளு. அப்புறம் நீ கேட்கிறதைக் கேட்கலாம். நான் பட்டாளத்திலே சேர்ந்தப்புறம் எங்க வீட்டிலே எனக்குக் கல்யாணம் செஞ்சு வைக்க முயற்சி பண்ணினாங்க. ஆனால் நான் பட்டாளத்திலே இருந்ததுனாலே எனக்குப் பெண் கொடுக்க யாரும் முன் வரலை. கடைசியிலே ஒரு புண்ணியவான் எனக்குப் பெண் கொடுக்க முன் வந்தாரு. அவர் மகளுக்கும் எனக்கும் கல்யாணம் நடந்துது. எங்களுக்கு ஓர் ஆணும் பெண்ணுமா ரெண்டு குழந்தைகள் பிறந்தன. எங்கூட இருபத்தஞ்சு வருஷம் குடும்பம் நடத்திட்டு அவள் மஞ்சள் குங்குமத்தோட போய்ச் சேர்ந்தாள். புலிக்குப் பிறந்தது பூனை ஆகாதுன்னு என் மகனும் ராணுவத்திலே சேர்ந்து வீர மரணம் அடைஞ்சுட்டான். என் வாழ்க்கையிலே ஒரு பெரியவர் விளக்கேற்றி வைச்சது போல நானும் ஒரு வீரனோட வாழ்க்கையிலே விளக்கேத்தி வைக்கணுமின்னு ஆசைப்பட்டேன். அதனாலே என்னோட ஒரே மகளை ஒரு பட்டாளத்தானுக்குக் கட்டிக் கொடுக்கணும்னு முடிவு பண்ணினேன். ஆனால் அந்தப் பாவி என் ஆசையிலே மண்ணை அள்ளிப் போட்டுட்டா. ஒரு வீரக் குடும்பத்திலே.... ஒரு தியாகக் குடும்பத்திலே பொறந்தவ சுயநலப் பிண்டமாய்ப் போயிட்டாப்பா.... ஆமாம். ராணுவ வீரனோட வாழ்க்கை நிலையானது இல்லை; அதனாலே என்னாலே ஒரு வீரனுக்கு வாழ்க்

**யானைக்கு மருந்து!**



ஒரிஸ்ஸாவில் ஒரு சிறு நகரத்தில் திடீர் என்று எந்த மருந்துக் கடையிலும் சாதாரணமாகக் கிடைக்கும் ஒரு வயிற்று வலி மருந்து கிடைக்கவில்லை. காரணம் அந்த ஊரில் ஒரு யானைக்கு வயிற்று வலி கண்டது. யானை டாக்டர் ஒரு வேளைக்கு ஒரு பெரிய டப்பா மாத்திரை வீதம் மூன்று வேளை கொடுக்கச் சொன்னாராம். அது கிட்டத்தட்ட 1500 மாத்திரைகள்!

—ஸ்டேட்ஸ்மென் - கே. ஆர்.

கைப்பட முடியாதுன்னு எழுதி வைச்சிட்டு ஓடிப் போயிட்டா.'' குழந்தையைப் போல் குலுங்கிக் குலுங்கி அழுதார் ரங்கதுரை.

சிவம் பிரமை பிடித்தவர் போல் உட்கார்ந்திருந்தார். அவர் மனத்தில் ஒரு போராட்டம் நிகழ்ந்தது.

''ராணுவ வீரனோட வாழ்க்கை நிச்சயமில்லாததுன்னு நெனைக்கிறது எவ்வளவு பைத்தியக்காரத்தனம்? கல்லு விழுந்து பொழச்சவனும் உண்டு. புல்லு தடுக்கிச் செத்தவனும் உண்டு. சிவம், என் மகள் இப்படிப் பண்ணிப்புட்டாளேன்னு நான் வருத்தப்படலை. இந்த நாட்டின் ஒவ்வொரு வீரனுக்கும் நாம நன்றிக் கடன் பட்டிருக்கோம். அவுங்கள்ளே ஒத்தனோட சந்தோஷத்துக்குக் காரணமா இருக்கிறதன் மூலமா ஒருத்தனோட நன்றிக் கடனையாவது அடைக்கலாம்னு நெனைச்சேன். ஆனால் அந்த ஆசையிலே இடி விழுந்திடிச்சு.''

கண்களில் கண்ணீர் வழிய உட்கார்ந்திருந்தார் சிவம்.

'போரில் ஒரு கண்ணையும், காலையும் இழந்து, ஒரே மகனையும் போரில் பறிகொடுத்த பின்னும் தன் மகளை ஒரு பட்டாளத்தானுக்குக் கொடுக்க முடியவில்லையேன்னு வருத்தப்படுற இவன் இந்த நாட்டுக் குடிமகனா அல்லது நீயா?' அவர் மனச்சாட்சி அவரைக் குடைந்தது. எவ்வளவு அறிவுகெட்டதனமாகவும் சுயநலக்காரனாகவும் நடந்து கொண்டுவிட்டோம் என்று நினைக்கும் போது அவருக்குத் தம் மேலேயே வெறுப்பு. 'ரங்கதுரையோ யாரோ ஓர் ஊர் பேர் தெரியாத சிப்பாயின் சந்தோஷத்துக்குக் காரணமாக இருக்கத் துடிக்கிறார். ஆனால் நானோ என் ரத்த சம்பந்தம் உள்ள சொந்தத் தங்கை மகளின் சந்தோஷத்துக்கு முட்டுக்கட்டையாக இருக்கிறேன்.... அதுவும் ராஜாவும், மதுமதியும் இவ்வளவு அந்நியோன்னியமாக இருக்கும் போது அவர்களை இணையவிடாமல் தடுத்தேனே! அருகிலேயே இருந்தேனே, மரகதத்தின் சாவை என்னால் தடுக்க முடிந்ததா?' அவர் அறிவு அப்பொழுது தான் விழித்துக் கொண்டு அவரைக் குடைந்தது. ரங்கதுரையின் கைகள் இரண்டையும் பற்றித் தம் கண்களில் ஒற்றிக் கொண்டார்.

# இப்போது! மனம்குளிரும் எலுமிச்சைப் புத்துணர்ச்சி வெள்ளம்.



புதுமை மயம்.
பேரதிசயம். லிரில்.
புத்துணர்வு சோப்.
மலையருவி அலைபுரளும்
ஜாலம். ஆலோலம்.
அலையெறியும்
தளதள பச்சை.
அதன் நயமோ
குளுகுளு எலுமிச்சை.
பொங்கிப் பீறிடும்
நுரைவளம். லிரில்.
புதுக் குமரியாய்
உங்களைப்
பூரிக்க வைக்கும்.







# லிரில்

புத்துணர்வு சோப்

## கிளுகிளு புத்துணர்வில் குளித்தெழ

மகாராஷ்டிரம், குஜராத், மத்தியப் பிரதேசம், தமிழ்நாடு, ஆந்திரப் பிரதேசம், கர்நாடகம், கேரளம் ஆகிய மாநிலங்களில் மட்டுமே கிடைக்கும்.

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-LR. 13C-140 TM

ரேடியோ ஸ்டேஷனுக்கு வெளியே காரில் அமர்ந்து அநூப் தன் தமக்கையின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அன்று அவன் தமக்கையின் பேச்சு ஒலிபரப்பாகிக் கொண்டிருந்தது. அவன் காரில் இணைத்திருந்த ரேடியோவை முடுக்கி விட்டு நிகழ்ச்சியைச் செவிமடுத்துக் கொண்டிருந்தான்.

மாதத்தில் ஒரு நாள் அவன் தமக்கையின் நிகழ்ச்சி வானொலியில் ஒலிபரப்பாவதுண்டு. அநேகமாக அது மாதர் நலனையும் மேம்பாட்டையும் பற்றியதாக இருக்கும். அதில் அவள் சமுதாயத்தின் பழைய கோட்பாடுகளைத் தகர்த்துப் புதிய கருத்துக்களைப் புகுத்திப் பெண்கள் விழிப்புற வழிகாட்ட முயல்வாள். அவள் வாழ்க்கையின் பெரும் பகுதி சமூகப் பணியிலேயே கழிந்து வந்தது. இன்றும் அவள் குரலில் அந்த உணர்வு தீவிரமாக ஒலித்தது. கடந்த பத்து ஆண்டுகளாகவே அவளது கருத்தோட்டத்தை அநூப் நன்கு புரிந்து வைத்திருந்தான். ஆனால் இன்று அவன் எதிர்பார்த்ததோ வேறு விஷயம். அவள் பேச்சில் அவன் மனம் லயிக்கவில்லை.



சிம்லாவிலிருந்து திரும்பியதுமே, அநூப் புக்குத் தன் தமக்கைக்கு ஓர் உடம்பும் இல்லை, தன்னை வரவழைக்க உடல்நலக் கோளாறு ஒரு சாக்கு என்பது தெரிந்து விட்டது. தமக்கையின் இந்தச் செயலை அவன் தப்பாக எடுத்துக் கொள்ளவில்லை. அதனால் அவளைப் பார்க்க ரேடியோ நிலையத்துக்கே வந்துவிட்டான். டிரைவருக்கு விடை கொடுத்து அனுப்பிவிட்டு அவனே தமக்கையை அழைத்துப் போக வந்திருந்தான். வெகு ஆவலோடு அவள் வருகையை எதிர்பார்த்து அவன் காரில் அமர்ந்திருந்தான்.

பேச்சு முடிந்ததும் அநூப் உஷாரானான். தமக்கையின் பேச்சு முடிந்து வேறு நிகழ்ச்சியும் தொடங்கி விட்டது. இனி எந்த நிமிஷமும் தன் தமக்கை காரை நோக்கி வரலாம் என்ற எண்ணத்தில் பரபரப்போடு அவள் காலடி ஓசையைக் கேட்கத் தயாரானான். கணம் கணமாகப் பொழுது ஏறிற்று. அதே வேகத்தில் அவன் உள்ளத்திலும் இனம் தெரியாததோர் அச்சம் விறுவிறுத்து ஏறியது. இருந்தாலும் தன் தமக்கையை எதற்கும் அஞ்சாமல் நின்று எதிர்கொள்வது என்று முடிவு செய்து கொண்டான்.

காலடிகளின் ஓசை நெருங்கிக் கேட்கவே, அவன் துறுதுறுப்புற்றான். குளிர் தாக்காமல் இருப்பதற்காக ஏற்கெனவே அவன் தொப்பி அணிந்திருந்தான். அதை முகம் மறைக்க இழுத்துவிட்டுக் கொண்டான். அவன் தமக்கை சாரதாவும், மாதர் மன்றத்தின் இரண்டு மூன்று உறுப்பினர்களும் காரை நோக்கி வந்து கொண்டிருப்பதைக் கண்டதும் அவனுக்குப் போன உயிர் வந்தாற் போலிருந்தது. 'நல்ல வேளை! அக்கா மட்டும் தனியாக வரவில்லை. பிழைத்தோம்' என்று எண்ணியவன் விறைப்பாக அமர்ந்து கொண்டான். கோட்டுக் காலரை நிமிர்த்தி விட்டுக் கொண்டு அவர் களை எதிர்பார்க்கலானான். எல்லோரும் அவன் தமக்கையின் பேச்சைப் புகழ்ந்து பாராட்டிக் கொண்டிருந்தார்கள்.

சாரதா வண்டியின் அருகில் வந்ததும் நின்றாள். சிறிது இருட்டாக இருந்ததால் வண்டியில் டிரைவருக்குப் பதில் தன் சகோதரன் உட்கார்ந்திருக்கிறான் என்பதை அவளால் கண்டுகொள்ள முடியவில்லை. சாரதா தன்னோடு வந்த பெண்மணிகளிடம் விடை

# இன்பத் தென்றல்

குல்ஷன் நந்தா

பெற்றுக் கொண்டு வண்டியின் பின் கதவைத் திறந்து ஏறி அமர்ந்தாள். அநூப் அவள் குறிப்பறிந்து வண்டியை 'ஸ்டார்ட்' செய்தான். கண் மூடிக் கண் திறக்கும் நேரத்துக்குள் வண்டி ரேடியோ நிலையத்தை விட்டு வெளியேறிப் பொதுச் சாலையைக் கிழித் கொண்டு பாய்ந்து ஓடியது.

ரேடியோவில் ஏதோ சினிமாப் பாட்டு ஒலி பரப்பாகிக் கொண்டிருந்தது. சாரதாவுக்குத் திரைப்படப் பாட்டுக்கள் என்றால் கட்டோடு பிடிக்காது. எனவே ரேடியோவை நிறுத்தச் சொல்லிவிட்டுச் சால்வையைக் காலோடு தலை இழுத்துப் போர்த்திக் கொண்டாள். அநூப் ஏதும் பேசாமல் வண்டியை ஓட்டிக் கொண்டிருந்தான்.

சாரதாவுக்கு எந்த விஷயம் எப்படி நினைவுக்கு வந்ததோ, ''டிரைவர்! உனக்கு மரியாதை தெரியவில்லை!'' என்று கடிந்து கொண்டாள்.

அநூப் நடுங்கும் குரலில் சும்மா 'உம்' கொட்டி வைத்தான்.

''உனக்கு எத்தனை தடவை சொல்லியிருக்கிறேன், நான் வண்டியில் உட்கார வந்தால் இறங்கிக் கதவைத் திறக்க வேண்டும் என்று!''

''மறந்து விட்டது, அக்கா!''

''என்ன, நீயா?'' துணுக்குற்றுக் கேட்ட சாரதா, ''வண்டியை நிறுத்து!'' என்று உறுமினாற்போல் உத்தரவிட்டாள்.

அநூப் உடனே பிரேக்கின் மேல் காலை வைத்தான். வண்டி நடுச் சாலையில் நின்று விட்டது. சாரதா முன் பக்கம் சாய்ந்து அவனைப் பார்த்தாள்.




தமிழாக்கம்: ரா. வீழிநாதன்

''அநூப், நீ எப்போது வந்தாய்?'' என்று கேட்டு, அவன் தலையைப் பற்றி முகத்தைத் திருப்பினாள்.

''இன்றைக்குத்தான். பகல் முழுதும் கால்காவில் இருந்தேன். டாக்ஸியே கிடைக்கவில்லை.''

''டிரைவர் எங்கே?''.

''அவனுக்கு விடை கொடுத்துஅனுப்பிவிட்டேன்!''

''ஏன்?''

''உன்னையும் அழைத்து வந்தாற்போலிருக்கும், உன் பேச்சையும் கேட்டாற் போலிருக்கும் என்பதற்காக!''

''என் பேச்சை வீட்டிலேயே கூடக் கேட்டிருக்கலாமே!''

''கேட்டிருக்கலாம்தான். இருந்தாலும் கிட்ட இருந்து கேட்கிறது போல் ஆகுமா? வீட்டுக்கும் ரேடியோ ஸ்டேஷனுக்கும் எத்தனை தூரம்?'' என்றவன், ''நான் வெளியே காரிலே உட்கார்ந்திருந்தாலும் உன் எதிரே உட்கார்ந்திருந்தாற் போலிருந்தது!'' என்றான்.



''நான் கேட்டதைச் செய்து தரவில்லை என்று கோபித்துக் கொண்டு என் மாப்பிள்ளை நேற்று ஊருக்குக் கிளம்பிப் போய்விட்டார்!''

''அட பாவமே! என்ன கேட்டார் அப்படி? தங்கமோதிரமா? தங்க ரிஸ்ட்வாச் செயினா?''

''அதெல்லாம் இல்லே! வெங்காய பஜ்ஜி!''

- ரமணி ரங்கநாதன்

''ஆமாம், ரூபா சாதாரணப் பெண் என்று உனக்கு யார் சொன்னது?''

''ஒருத்தர் சொல்லித் தெரிய வேண்டுமாக்கும்? அஞ்சு எனக்கு எல்லாவற்றையும் சொல்லி விட்டாள்!''

''எத்தனை சொல்லியிருந்தாலும் அஞ்சு ஒன்றே ஒன்றை மட்டும் சொல்லியிருக்க மாட்டாள் என்று நினைக்கிறேன். ரூபா அழகான பெண்; சூது வாது தெரியாத சாதுப் பெண்; அதோடு நல்ல அறிவாளிப் பெண்!''

''எதையும் மறைக்கவில்லை அஞ்சு. அவள் குடும்பம்...?''

''ஏழைக் குடும்பம். அம்மாவைத் தவிர அவளுக்கு இந்த உலகத்தில் வேறு யாருமே நாதி கிடையாது!''

''அப்படி இருக்கும்போது நம் குடும்பத்துக்கும் அவள் குடும்பத்துக்கும் சம்பந்தம் ஒத்துப்போகும் என்று நீ எப்படி முடிவு கட்டினாயாம்?''

சாரதா அதற்கு ஒரு பதிலும் கூறாமல் மௌனம் சாதிக்கவே அநூப் வண்டியைக் கிளப்பினான். எதிர்த்தாற்போலிருந்த கண்ணாடியில் சாரதாவின் முகம் தெரிந்தது. 'அவள் முகத்தில் ஏன் இந்தக் கடுமை?' நிமிஷத்துக்கு நிமிஷம் அந்தக் கடுமை அதிகமாகிறாற்போலத் தோன்றியது. சிறிது நேரத்துக்கெல்லாம் அநூப் அங்கு நிலவிய மௌனத்தைக் கண்டு நடுங்கிப் போனான். இரவின் அமைதியில் எழுந்த இன்ஜினின் ஒலி அவன் இதயத்தைப் பிளக்கிறாற் போலத் தோன்றியது. அவன் வண்டியின் வேகத்தை அதிகரித்தான்.

வீட்டுக்குப் போன பின்னரும்கூடச் சாரதா தன் மௌனத்தைக் கலைக்கவில்லை. அவளுடைய கம்பீரமான முகத்தை நிமிர்ந்து பார்க்க அநூப்புக்குத் துணிவு ஏற்படவில்லை. சாரதா சால்வையைத் தூக்கி ஸோபாவில் விட்டெறிந்தாள். கணப்புக்குப் பக்கத்தில் போய் நின்று கொண்டு குளிர் காயலானாள்.

அநூப்பினால் பேசாமல் இருக்க முடியவில்லை. ''ஏன், அக்கா! என் மேல் கோபமா?'' என்று பயந்து கொண்டே கேட்டான்.

''பின்னே கோபப்படாமல் சந்தோஷப்பட முடியுமா? நீ இப்படிப் பயபக்தியை விட்டு அடங்காப்பிடாரியாகப் போவாய் என்று நான் கனவிலும் நினைக்கவில்லை.''

''நீ நினைக்கிறாற்போல் நான் ஒன்றும் தப்பு தண்டாக் காரியம் செய்யவில்லை, அக்கா!'' என்றான் அநூப்.

''எதற்கு முழுப் பூசணியைச் சோற்றில் மறைக்கப் பார்க்கிறாய்? அஞ்சுவைப் போன்ற நல்ல பெண்ணை விட்டு விட்டு முன் பின் தெரியாத ஒரு சாதாரணப் பெண்ணைச் சுற்றித் திரிகிறாயாமே! இதுதான் நல்ல பிள்ளைக்கு அழகோ?''

''உன் சீர்திருத்தக் கருத்துக்கள் காரணமாக. நீ சமூகத்தில் விழிப்புணர்வை ஏற்படுத்தப் பாடுபடுகிறாய்; சாதி வேற்றுமை, பொருளாதார வேற்றுமை ஆகியவற்றை ஒழிக்க விரும்புகிறாய்; ஏழை — பணக்காரன் என்ற வேற்றுமை பாராட்ட விரும்பவில்லை. சமூகத்தில் தாழ்த்தப்பட்ட பெண்களைக் கைதூக்கி விட்டு அவர்களுக்கு ஒரு புதிய வாழ்க்கை சமைக்க விரும்புகிறாய்!''

''ஆனால் அதற்காக அந்தச் சோதனையை என் வீட்டில் நடத்திப் பார்த்துச் சாதனைப் பட்டியல் தயாரிக்க விரும்பவில்லை. என் குடும்பத்தில் ஒரு கிறிஸ்துவப் பெண்ணைக் கொண்டு வந்து என் மானம் மரியாதையைக் கப்பலேற்ற விரும்பவில்லை. நினைவிருக்கட்டும்!''

''அப்படியானால் உன் பேச்சு, சமூகப் பணி, மாதர் நலம், விழிப்புணர்ச்சி எல்லாமே வெறும் வெளி வேஷம் என்று சொல்லு!''

''அநூப்!'' கோபத்தில் கொதித்தெழுந்து கூச்சலிட்டாள் சாரதா.

''ஆமாம், அக்கா! உன் சொல்லும் செயலும் உண்மையானவை என்றால் அந்தப் பெண்ணுக்குக் கட்டாயம் இந்த வீட்டில் இடம் கொடுப்பாய்!'' என்று அநூப் பதிலுக்கு இறுக்கினான்.

''ஒரு சில நாட்களுக்குள்ளாகவே அந்தப் பாவிப் பெண் உன்னை மந்திரம் போட்டு வசியப்படுத்தி விட்டாள் போலிருக்கிறதே!''

''அன்புக்கு ஒரு மந்திர சக்தி உண்டு, அக்கா! அது யாரையும் இலேசில் வென்றுகொண்டு விடும். அன்புக்குக் காலம், பொழுது இடம், பொருள், ஏவல் என்ற இடர்ப்பாடெல்லாம் கிடையாது!''

''நானும்தான் உன்னைப் பிறந்த நாள் முதலாக நேசிக்கிறேன். தாயாருக்கும்மேலாக உரிமை பாராட்டி, அன்பு செலுத்துகிறேன்!''

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

"வீணு விகார்" — 17-A, ஃபிளாங் ரோடு,
ஷண்முகானந்தா ஹாலுக்கு அருகில்
சயான் (கிழக்கு) பம்பாய்-22. D. D.
டெலிபோன்: 471455
தபால் பெட்டி 6759 : : தந்தி: "GROWRICH"

**வாடிக்கையாளர்களுக்கு புது வருட வாழ்த்துக்கள்**

**1976 ஜனவரியில் புதிய குருப்புகள்**
**தொடங்குகிறோம் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்**
**ஏலம் கேட்பவர்களுக்கும் ஏலம் கேட்காதவர்களுக்கும்**
**சமமான டிவிடெண்டுகள் உண்டு**

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | நீண்ட காலம் | ஏலத் தேதி |
|---|---|---|---|---|
| STB | ரூ. 100/- | ரூ. 2500/- | 25 மாதங்கள் | 11-1-76 |
| STC | ரூ. 50/- | ரூ. 1250/- | 25 மாதங்கள் | 11-1-76 |
| STF | ரூ. 25/- | ரூ. 625.- | 25 மாதங்கள் | 11-1-76 |
| LTM | ரூ. 50/- | ரூ. 2000/- | 40 மாதங்கள் | 11-1-76 |
| LTG | ரூ. 125/- | ரூ. 5000/- | 40 மாதங்கள் | 18-1-76 |
| LTF | ரூ. 250/- | ரூ. 10000/- | 40 மாதங்கள் | 25-1-76 |
| LTE | ரூ. 500/- | ரூ. 20000/- | 40 மாதங்கள் | 25-1-76 |

தலைமை ஆபீஸ் & ரிஜிஸ்டர்டு ஆபீஸ்:
**"பாலுஸேரி பில்டிங்ஸ்"**
3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-600005
கிளைகள்: பெங்களூர் - கல்கத்தா - புது டில்லி - கோயமுத்தூர்

இலவசப் பிரசுரத்திற்கு எழுதுங்கள்

**சீட்டுகள் ஒதுக்குதல் கம்பெனியின் உரிமையைப் பொறுத்தது**

வேலை செய்யும் நேரங்கள்:
காலை 8 மணி முதல் 10-30 வரை; மாலை 4 மணி முதல் 7-30 வரை

வார விடுமுறை: திங்கட்கிழமை

ஸ்தாபிதம்: 1947

29 YEARS

எங்கள் சேவை உங்களுக்குத் தேவை



**உபாத்தியாயருக்கு உபதேசம்!**

1. புத்தகங்கள், பேனா, பென்சில் முதலியவற்றை மாணவர்களிடமிருந்து முடிந்தவரை வாங்காது இருக்கவும். வாங்கினால் நினைவாகத் திருப்பித் தந்துவிடவும். இல்லையானால் மாணவர்களுக்குத் தொல்லையாயிருக்கும்.
2. மாணவர்கள் பள்ளிக்கும் படிக்கத்தான் வருகிறார்கள் என்பதை அவர்களுக்கு நினைவு படுத்தவும்.
3. பாடங்களை முன்பே தயாரித்துக் கொள்ளாமல் பாடங்களை நடத்தாதீர்கள்.
4. மாணவர்களை அடிக்காதீர்கள். கன்னத்தில் அறைந்தால் காது செவிடாகிவிடும். சட்டம் உங்களுக்கு ஆதரவாக இல்லை.
5. உங்களுக்குத் தெரிந்தவைகளையெல்லாம் மாணவர்களுக்குத் திணிக்க முயற்சி செய்யவேண்டாம்.

பள்ளிக்கூடத்தின் ஆண்டு மலரில் மாணவர்களுக்குத்தான் அறிவுரைகள் கூறப்பட்டு இருக்கும். இந்த ஆண்டு சேலம் சிறுமலர் உயர்நிலைப் பள்ளியின் ஆண்டுவிழா மலரில் முன்னாள் தலைமையாசிரியரான மறைதிரு புட்பநாதர் மேற்கூறியவாறு அறிவுரைகளை ஆசிரியர்களுக்கு வழங்கியுள்ளார்.—சேலம் தர்மசக்ரா



''உன் அன்பின் பெருமையை அறிந்ததால் தானே என் வாழ்க்கை வளம் பெற உன் வாழ்த்துக்களைப் பெற வந்திருக்கிறேன்!''

''ஆனால் நான் அதை மறுத்தால்...?''

''அப்படி என்னால் எண்ணியே பார்க்க முடியவில்லை!''

''வேண்டாம், அநூப்! அவள் இந்த வீட்டு மருமகளாக ஆக முடியாது!''

''ஏன் முடியாது?'' அநூப்பின் குரலில் ஓர் ஏற்றம் தொனித்தது.

சாரதாவின் முகம் நிமிஷத்துக்கு நிமிஷம் சிவந்தது. கண்களில் அன்புக்குப் பதில் ஆத்திரம் தணலாகக் கனிந்தது.

அவள் அநூப்பின் கேள்விக்குப் பதில் சொல்லவில்லை. அவன் ஆத்திரத்தில் சீறினான்: ''நான் புரிந்து கொண்டு விட்டேன், அக்கா! போயும் போயும் உன்னிடம் வந்து அன்புப் பிச்சை கேட்டேனே; அது என் தவறு. நீ வாழ்க்கையில் அன்பையே கண்டு அறியாதவள். உனக்குப் பெற்ற தாய் — தந்தையரின் அன்பும் கிட்டவில்லை; கட்டிய கணவனின் அன்பும் கிடைக்கவில்லை — நீ உன் மணவாழ்க்கையை அகந்தை காரணமாகச் செல்லரிக்க விட்டவள். அன்பையே அறியாத நீ உன் துயரத்தை மறைப்பதற்காகச் சமூகப் பணியில் நாட்டம் கொண்டிருப்பதாக நாடகமாடுகிறாய். உனக்கு அன்பு என்பது என்னவென்று தெரிந்தால்தானே அதன் பெருமை தெரிய வரும்?''

சாரதா பொறுமை இழந்தாள். வந்த ஆத்திரத்தில் அநூப்பின் கன்னத்தில் ஓங்கி ஓர் அறை விட்டாள். அதன் ஓசை அந்த அறையில் எதிரொலித்த பின்னரே அடங்கியது. அப்புறம்? அறை முழுதும் மரண அமைதி நிலவியது. இதுவரை யாருமே சாரதாவிடம் இத்தனை கடுசொல்லைக் கடுமையாக உதிர்த்ததில்லை.

இருவரும் ஒருவரை யொருவர் சிறிது நேரம் விழி அசைக்காமல் பார்த்துக்கொண்டிருந்தனர். இருவருடைய இதயங்களும் களைப்புத் தணலைப் போல் கனன்று கொண்டிருந்தன. அநூப்பின் கண்களில் நீர் கொப்புளித்துக் கொண்டு வந்தது. அதை எப்படியோ அடக்கிக் கொண்டு அவன் கழுத்தை ஓர் உதறல் உதறிக் கொண்டு அறையை விட்டு வெளியேறினான். சாரதா பொம்மை போல் அவன் போவதையே பார்த்துக் கொண்டு நின்றாள்.

அநூப் எங்கே போனானோ தெரியாது. ஆனால் அவன் புறப்பட்டபோது கார் எழுப்பிய ஓலம் சாரதாவின் காதுகளில் இன்னமும் ஒலித்துக் கொண்டிருந்தது.

அவன் சொன்ன சொற்கள் அத்தனையும் அலை மேல் அலையாக அவள் மனக் கடலில் எழுந்து விழுந்து மோதி உடைந்து ஆர்ப்பரித்துக் கொண்டிருந்தன. அப்பா! அந்தச் சொற்களுக்குத்தான் என்ன சக்தி, என்ன சக்தி! உள்ளத்தின் ஆழத்தில் உருத் தெரியாமல் புதைந்து போயிருந்த துயரங்களைக் குத்திக் கிளறி உயரக் கொண்டு வந்து மனத்தையும் மூளையையும் உலுக்கி எடுத்து விட்டனவே! அவள் சோபாவில் கிடந்த சால்வையை எடுத்துக் கொண்டு தன் அறையை நோக்கி நடந்தாள்.

எதிர்த்தாற்போல் சாப்பாட்டு மேஜைமீது இரண்டு தட்டுக்கள் வைக்கப் பட்டிருந்தன. அதைக் கண்ட சாரதா, ''சனன் சிங்!'' என்று வேலைக்காரனை அழைத்தாள்.

''இதோ வந்து விட்டேன், அம்மா!'' என்று கூறிக் கொண்டே சனன் சிங் சமையலறையிலிருந்து வெளியே வந்தான்.

''இன்று நான் சாப்பிடப் போவதில்லை.''

''தம்பி...?''

''எனக்குத் தெரியாது!'' என்றவாறே, சாரதா தன் அறைக்குப் போய்விட்டாள். 'இன்றைக்கு எஜமானி அம்மாளுக்கு என்ன வந்துவிட்டது? இப்படிப் பேசுகிறார்களே!' என்று ஒரு கணம் எண்ணிப் பார்த்தான் சனன் சிங். சிக்கெடுக்க முடியாத அந்தச் சிடுக்கில் மாட்டிக் கொண்டு தலைகால் புரியாமல் தவித்ததுதான் அவன் கண்ட பலன்.

தன் அறைக்குச் சென்ற சாரதா துணிமணிகள் வைத்திருந்த அலமாரியைத் திறந்து கூட இருக்க மாட்டாள். அதற்குள் வாசலில் கார் வந்து நின்ற ஓசை கேட்டது. 'அநூப் தான் திரும்பி வந்து விட்டான்!' என்று எண்ணியவள் மீண்டும் உணவுத் தட்டுக்களை எடுத்து வைக்குமாறு சனன் சிங்குக்கு உத்தரவிடலாம் என்று திரும்பினாள்.

ஆனால் சாரதாவின் ஊகம் தவறாகி விட்டது. அவள் மைத்துனன் அஜீத் தன் மனைவி

க்ஷமாவோடு அவனெதிரே நின்று கொண்டிருந்தான். அவர்களைப் பார்த்ததும் சாரதா வலுக் கட்டாயமாகச் சிரிப்பை வரவழைத்துக் கொள்ள முயன்றாள்.

"க்ஷமா! நான் சொன்னேனில்லையா, வானொலி நிகழ்ச்சி முடிந்ததும் அண்ணி வீட்டுக்குத்தான் வருவாள் என்று!" அண்ணி வீட்டில் இருக்கவே அஜீத் தன் மனைவியைப் பார்த்துக் கூறினான்.

"நான் இப்பொழுதுதான், சிறிது நேரத்துக்கு முன்னால்தான் வந்தேன்!" என்ற சாரதா அவர்களை உட்காருமாறு சொன்னாள்.

"நிகழ்ச்சி எப்படி இருந்தது?" என்று கேட்டான் அஜீத்.

"நீ கேட்கவில்லையா?"

"கேட்க முடியவில்லை. என் நண்பர் ராஜன் எங்களைக் கேட்காமல் சினிமாவுக்கு டிக்கட் வாங்கி விட்டார்! ராஜன் தம்பதி வற்புறுத்தவே நாங்கள் சினிமாவுக்குப் போய் விட்டோம்!"

"அவர்கள் இப்பொழுது எங்கே? வெளியில் வண்டியிலா இருக்கிறார்கள்?"

"இல்லை; வீட்டுக்குப் போய்விட்டார்கள். எத்தனையோ சொன்னோம், உள்ளே வந்து விட்டுப் போகுமாறு. ஆனால் கேட்கவில்லை!" க்ஷமா சாரதாவைப் பொருள் பொதியப் பார்த்தவாறே கூறினாள்.

"இதற்காக அவர்கள் இவ்வளவு உணர்ச்சி வசப்பட வேண்டியதில்லை" என்றாள் சாரதா.

அஜீத் முகத்தைச் சிணுங்கிக் கொண்டு கூறினான்: "ஆனாலும் அநூப் தன் காதலை மூடி மறைத்திருக்க வேண்டாம். வீணில் நம்மைத் தலை குனியும்படியும் வைத்திருக்க வேண்டாம்!"

மைத்துனனின் இந்தக் குத்தல் சாரதாவின் உள்ளத்தைக் கூரிய கத்தியெனத் துளைத்தது; துடித்து விட்டாள். என்றாலும் தன் உள்ளம் வெளிப்பட்டுவிடக் கூடாதே என்பதற்காக மௌனம் சாதித்தாள். அஜீத்தின் அண்ணனிடம் கோபித்துக் கொண்டு அவள் லண்டனிலிருந்து இந்தியா வந்த பிறகு அஜீத்தின் குடும்பத்தினர் அவளிடம் விட்டேற்றியாக இருக்கிறார்கள் என்பதை அவள் அறிவாள். இருந்தாலும் அடிக்கடி அஜீத் அவளைப் பார்க்க வருவான். அவளுக்கு வேண்டிய ஒத்தாசைகளைச் செய்து கொடுத்துவிட்டுப் போவான்.

அங்கு அவனுக்கு மிக நெருங்கிய நண்பர் ராஜனின் பெண். சீரும் சிறப்பும் மிக்க குடும்பத்தைச் சேர்ந்தவள். எனவே, அவனே முன்நின்று அநூப்புக்கு இந்தச் சம்பந்தத்தை ஏற்பாடு செய்ய முயன்றான்.

சாரதா அந்தப் பேச்சை மேலே வளர விடாமல் தடுப்பதற்காக "என்ன படம் பார்த்துவிட்டு வருகிறீர்கள்?" என்று க்ஷமாவைக் கேட்டாள்.

"விளையாட்டு!"

"எப்படி இருந்தது?"

"வெகு சுவையாக இருந்தது. உங்களுக்குக் கூடக் கட்டாயம் பிடிக்கும்!"

"எப்படிச் சொல்கிறாய்?"

"சமூகப் படம். ஒரு செல்வந்தரின் மகன் ஒரு வேசியை உளமாரக் காதலிக்கிறான்!"



**செய்திச் சிரிப்பு!**

**"வெங்காயம் விலை குறைந்து விடும்."**

—டெக்கான் ஹெரால்ட்

**"ஒரு சந்தோஷமான கண்ணீர்க் கதை."**

—பாபு

OOOOOOOO-OOOOOOOOOO

"சரி. கதையின் முடிவு என்ன?"

"முடிவு என்ன, இரண்டு பேருக்கும் கல்யாணம்தான்." க்ஷமா உணர்ச்சியில் மிதந்து கூறினாள்.

"இட் ஈஸ் நான்ஸென்ஸ்!" இடுமென்று சாரதா சீறினாள். அவள் முகம் கோபத்தில் 'ஜிவு ஜிவு' என்று சிவந்தது. அஜீத்தும் க்ஷமாவும் அவளை வியப்புடன் நோக்கினர்.

"உங்களுக்கு ஏன் இத்தனை கோபம் வருகிறது, அண்ணி? அது வெறும் திரைப்படக் கதைதானே?" என்றான் அஜீத்.

"கோபமும் இல்லை, மண்ணும் இல்லை. ஏதோ சொன்னேன். எதுவுமே அவரவர் மனத்தைப் பொறுத்தது. இதில் நம் கருத்துக்கு ஏது மதிப்பு?" சாரதாவுக்கு வெட்கமாகப் போய்விட்டது, ஏன்தான் அப்படிப் பேசினோமோ என்று! க்ஷமாவைப் பார்த்து, "ஸாரி" என்றாள்.

"இதையேதான் இன்று நாங்கள் மிஸஸ் ராஜனிடம்கூடச் சொல்லிக் கொண்டிருந்தோம்!" அஜீத் அவள் கருத்தையொட்டிப் பேச்சைத் தொடர்ந்தான்: "எங்கள் சாரதா மன்னி சமூகத்தின் நிலைமைகளைக் களைய முயல்கிறாள் என்பது உண்மைதான். ஆனாலும் அநூப் ஒரு தாழ்ந்த குலத்துப் பெண்ணை வீட்டுக்குள் கொண்டு வந்தால் அவள் அதை ஒரு நாளும் பொறுக்கமாட்டாள் என்று நான் கூறினேன்."

"அதற்கு மிஸஸ் ராஜன் என்ன சொன்னாள்?" என்று சாரதா ஆர்வத்தோடு கேட்டாள்.

"அவளுக்கு எங்களிடம் சற்றுக் கோபம் தான். இருந்தாலும் அதிர்ஷ்டம் அவள் பக்கத்தில் இருந்துவிட்டது!" என்றாள் க்ஷமா.

"எப்படி?"

"அங்கவுக்குத் தில்லியிலே நல்லதொரு குடும்பத்தில் திருமணம் நிச்சயமாகி விட்டது!"

க்ஷமாவின் இந்தப் பதிலைக் கேட்டபோது சாரதாவுக்கு யாரோ தலையில் சம்மட்டி கொண்டு அடிக்கிறாற்போல் இருந்தது. அவளது எழில்மிகு வண்ணக் கனவுகளை ஓர் உலுக்கு உலுக்கிக் கலைத்துவிட்டாற் போல் தோன்றியது.

(தொடரும்)

---

**முள்ளம்பன்றியின் உடம்பிலுள்ள முட்கள் அதன் உரோமங்கள் ஒன்று சேர்ந்து தடிப்பதால் உண்டானவையே.**

—கே. வி.



## நாள் தோறும் கண்கவர் புதிய தோற்றம்
## மக்கள் போற்றும் உயர்தர மாற்றம்




வாரத்திற்கு வாரம் புத்தம் புதிய டிசைன், புதிய பாணி, கலைத்திறன் கொண்ட துணிமணிகள். வழங்குவதோ பாம்பே டையிங். செயற்கை இழை ஷர்ட்டிங்குகளின் ஒப்பற்ற உயர் தரம் 50/50, 67/33, 80/20 மற்றும், நூற்றுக்கு நூறு பாலியெஸ்டர் பிரிண்டுகள், பாலியெஸ்டர் டெனிம்கள் மற்றும் டெக்ஸ்சரைஸ்ட் ஸூட்டிங்குகள்.

**கபித்தான்** பாலியெஸ்டர் ஷர்ட்டிங்குகள்

**வாடரீன்** பாலியெஸ்டர் ஸூட்டிங்குகள்

## ஆயிரமாயிரம் வகைகள்—
## அன்றாடம் புதுப்புது டிஸைன்கள்!

# பாம்பே டையிங்

BDM-27A tam



# சிரிப்புமேடை

பாலாஜி

(எல்லாப் பத்திரிகைகளிலும் கேள்வி பதில் பகுதி வருவதைப் படித்த நண்பர் நாரு வுக்கும் அதில் ஆர்வம் ஏற்பட்டதாம். இவருக்குக் கேள்வி கேட்பதைவிடப் பதில் சொல்வதில்தான் ஆர்வம். ஆனால், பாவம், அவர் சாதாரண ஒசிப் பத்திரிகை வாசகர் என்பதால் அவரிடம் கேள்விகள் கேட்பவர் யாரும் இல்லை. ஆகவே, அவர் தம் குறிப்புப் புத்தகத்தில் சொந்தமாகவே கேள்விகளை எழுதிப் பதிலும் எழுதி வைத்திருக்கிறார். அவைகளிலிருந்து சில.)




கேள்வி: உங்கள் வாழ்க்கையில் மறக்க முடியாத நிகழ்ச்சி என்ன?

பதில்: சரியாகப் பதினேழு ஆண்டுகளுக்கு முன்பு நண்பர் ஒருவருக்குக் கைமாற்றாக இரண்டு ரூபாய் கொடுத்தேன். அது இன்னும் திரும்பி வரவில்லை. அன்று கொடுத்த கடனைப் பற்றி என்னால் மறக்கவே முடிய வில்லை.

ஃ ஃ ஃ

கே: முதலாளியின் மனத்தில் இடம் பிடிக்க என்ன செய்ய வேண்டும்?

ப: முதலாளியைச் சதா **வலம்** வந்தால் **இடம்** பிடிக்கலாம்.

ஃ ஃ ஃ

கே: அகராதிகளில் எது சிறந்தது?

ப: எதுவும் இல்லை. எத்தனையோ அகராதி களைப் பார்த்தேன். எதிலும் 'இண்டெக்ஸ்' என்று சொல்லப்படும் வார்த்தைக் குறிப்பு விவரமோ, அகராதியில் உள்ள வார்த்தை களுக்கு அட்டவணையோ இருப்பதில்லை.

கே: பழமொழிகள் பலவற்றைக் காலத் துக்கு ஏற்றபடி மாற்ற வேண்டியது அவசியம் அல்லவா?

ப: ஆமாம். ''30 செ. மீ. உதவுவது போல் அண்ணன் தம்பி உதவமாட்டார்'' ''சங்கீதம் என்றால் 1400 கிராம் என்ன விலை என்பாள்'' — இவை புதுப்பிக்கப்பட்ட பழ மொழிகள்.

ஃ ஃ ஃ

கே: சங்கரபாண்டியன் கோட்டை எங்கு இருக்கிறது?

ப: என்னைக் கேட்டால்? சங்கரபாண்டிய னைக் கேளுங்கள், அவருடைய கோட், டை எங்கு வைத்திருக்கிறார் என்று.

ஃ ஃ ஃ

கே: பரமசிவன் தலையில் இருப்பது என்ன?

ப: எந்தப் பரமசிவன்? பக்கத்து வீட்டுப் பரமசிவன் தலையில் பேன் இருக்கிறது.

ஃ ஃ ஃ

கே: இசைவிழா எப்படி?

ப: உரக்கக் கேளுங்கள். எனக்குக் காது மந்தம். ஆகவே என் காதில் இசை, விழா!

ஃ ஃ ஃ

கே: உங்களுக்குப் பிடித்த தத்துவ வாசகம் என்ன?

ப: ஒன்றா இரண்டா? எத்தனையோ! மாதிரிக்கு ஒன்று: எவ்வளவு உயரமான மனிதனாக இருந்தாலும் அவனுடைய கால் தரையைத்தான் தொடும்.

ஃ ஃ ஃ

கே: 'பதறுகிறான் ஒரு பாவை' திரைப் படம் பார்த்தீர்களா?

ப: பார்த்தேன். ஜமீந்தார் மகன் மோகனை வழியில் சந்தித்த நண்பன் நடேசன், தான் கல்லூரியில் படித்தபோது பார்த்த சங்கரனைப் பற்றிப் பேச வாயெடுத்தபோது, சோலையிலிருந்து வந்த நளினி (ஜலஜாஸ்ரீ) 'யாரிவன் இந்த எழிலரசன்' என்று பாடிக் கொண்டு வரும் காட்சியில் செம்மை இருந் தாலும், அவள் புடவை நீல நிறமாக இல் லாமல் சிவப்பாக இருந்திருந்தால் செம்மை மேலும் கூடியிருக்கும். புளி விலை இறங்கி இருக்கிறதா? இல்லாவிடில் பாடல் மெட்டு களில் இவ்வளவு புளிப்பு போட்டிருக்கமாட் டார்களே! வண்ணம் கன்னம். படப் பிடிப்பு ஒரே படபடப்பு. மொத்தத்தில்: சில்லறை படம்!

ஃ ஃ ஃ

கே: கிண்டி ரேசில் பணம் பண்ண முடியுமா?

ப: முடியும். மைதானத்துக்கு வெளியே பட்டாணி, கடலை வியாபாரம் செய்தால்!

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# ஒவ்வொரு தாயும் தன் குழந்தையின் உணவு பற்றி என்ன அறிய விரும்புகிறார்



## அமுல்ஸ்ப்ரேயில் என்ன கிடைக்கிறது

**கே. என் குழந்தை ஆரோக்கியமாகவும் வலுவுடனும் வளருவதற்குத் தேவையான வைட்டமின்கள், கனிஜ பொருட்கள் மற்றும் புரதங்கள் அமுல்ஸ்ப்ரேயில் உள்ளனவா ?**

அமுல்ஸ்ப்ரேயில் பாலில் காணப் படும் எல்லா இயற்கையான சேர்க்கைப் பொருட்களும், கூடவே வைட்டமின்கள் மற்றும் கனிஜ பொருட்களும் உள்ளன.

வைட்டமின்கள் சேர்ப்பு தொற்றை எதிர்க்க, நன்ருக பசி எடுக்க, ஆரோக்கியமான நரம்புகள், எலும்புகள், கண்கள் மற்றும் பற்களுக்கு.

பியாலின் சீரண சக்தியை வளர்க்க, உடல் உறிஞ்சிக் கொள்ள, மற்றும் ஆரோக்கிய மான சருமத்துக்கு. கால்ஷியம், பாஸ்பரஸ் போன்ற கனிஜ சத்துக்கள் எலும்புகள் சீராக அமைய. இரும்புச் சத்து ரத்த அமைப்புக்கு.

புரதம் செல் அமைப்புக்கும் வளர்ச்சிக்கும் அடிப்படையானது. அமுல்ஸ்ப்ரேயில் தரமுயர்ந்த புரதங்கள் போதிய அளவில் இருக்கின்றன.

**கே. என் குழந்தையால் அமுல்ஸ்ப்ரேயை சீரணிக்க முடியுமா ?**

ஒவ்வொரு சொட்டுப் பாலும் மிக நுண்ணிய பவுடராக மாற்றப்படுகிறது. கொழுப்பும் அவ்வாறே மாற்றப்படுகிறது. இதனால் குழந்தை இதை எளிதில் சீரணிக்க முடிகிறது—பிறந்து சில நாட்களான குழந்தையால் கூடத்தான்.

**கே. அமுல்ஸ்ப்ரேயைத் தயாரிக்க நேரமாகுமா ?**

ஸ்ப்ரே-ட்ரை முறையால் தயாரிக்கப்படும் நுண்ணிய பவுடரான அமுல்ஸ்ப்ரே எளிதில் விரைவில் கரைகிறது. இதைத் தயாரிப்பது எளிது. இது பாட்டிலின் நிப்பிள் துவாரத்தில் அடைத்துக் கொள்வதில்லை. எனவே குழந்தை அதிக காற்றை விழுங்குவதில்லை.

**பாலஅமுல் மற்றும் வளரும் குழந்தை**

3-வது மாதத்தில், உங்கள் குழந்தைக்கு அமுல்ஸ்ப்ரேயைத் தவிர, பாலஅமுல் தானிய உணவு தரத் தொடங்குங்கள்.

**அதிக விவரங்கட்கு. இலவசமாக அமுல் குழந்தைப் புத்தகம்**

அமுல் குழந்தைப் புத்தகத்தை இலவச மாகப் பெற, த.பெ. 10124, பம்பாய் 400 001 என்னும் முகவரிக்கு எழுதுக. 50 பைசா தபால் தலை யுடன் உங்கள் முழு முக வரியையும் அனுப்புக.

## அமுல்ஸ்ப்ரே தாய்ப்பாலுக்குப் பதிலாகப் புகட்டச் சிறந்தது










விற்பனைக்கு விடுப்போர் : குஜராத் கோ-ஆப்பரேட்டிவ் மில்க் மார்க்கெட்டிங் பெடரேஷன் லிமிடெட், ஆனந்த்.

ASP/AS/27

